4 பக்கங்கள் 13 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 10 — மதுரை 5—1—72 புதன் — மலர் 4



## பிரதம மந்திரிக்கு பி. ராமமூர்த்தி தந்தி

சென்னை, ஜன. 3— சிம்சன் தொழிலாளர் தகராறில் தலையிட்டுத் தீர்வுகாணவேண்டும் என்று பிரதம மந்திரி இந்திரா காந்திக்கு இந்திய தொழிற்சங்க மையத்தின் பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமூர்த்தி தந்தி கொடுத்துள்ளார். மத்திய அரசு தலையிடாவிட்டால் நிலைமை மோசமாகும் என்றும் அந்தத் தந்தியில் அவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

இம்மாதிரித் தந்தியொன்றை மத்திய தொழிலாளர் அமைச்சர் ஆர். கே. கடில்கருக்கும் தோழர் ராமமூர்த்தி அனுப்பியுள்ளார்.

# சிம்சன் தொழிலாளர்கள் மீது அடக்குமுறைக்கு கண்டனம்

## தமிழக இந்திரா காங்கிரஸ் அட்ஹாக்கமிட்டி தீர்மானம்

சென்னை, ஜன. 3— சிம்சன் தகராறில் தி. மு. க. அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கையை யடுத்து தமிழ் நாட்டில் இந்திரா காங்கிரசுக்கும், தி. மு. க. வுக்கும் இடையே உறவு சீர்குலைந்துள்ளது.

தமிழ்நாடு (இந்திரா) காங்கிரஸ் அட்ஹாக் கமிட்டி கூட்டத்தில் இரு மத்திய அமைச்சர்களான சி. சுப்பிரமணியமும், மோகன் குமாரமங்கலமும் கலந்து கொண்டனர். அந்தக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் சிம்சன் தொழிலாளர்கள் மீது ஏவிவிடப்பட்ட கண்மூடித்தனமான அடக்குமுறையை வன்மையாகக் கண்டிக்கிறது. தொழிலாளர்களின் நியாயமான தொழிற்சங்க உரிமைகளுக்கும் தீர்மானம் ஆதரவளிக்கிறது.

சிம்சன் விவகாரம் பற்றி பேசுவதற்கு திட்டமிட்டிருந்த போதிலும் முதலமைச்சரைச் சந்திக்காமலேயே மத்திய அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார்.

தமிழ்நாடு அரசு உடனடியாக நடவடிக்கை எடுத்து தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்குத் தீர்வுகண்டு தேசிய நலனுக்கு அத்தியாவசியமான தொழிற்சாலைகளைத் திறக்கும் வகை செய்யவேண்டும் என்றும் அட்ஹாக் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் கோருகிறது.

தீர்மானத்தை விளக்கி நிருபர்கள் கூட்டத்தில் பேசிய அட்ஹாக் கமிட்டி கன்வீனர் ஏ. பி. சி. வீரபாகு, தவறு செய்தால் தி. மு. க.வை கண்டிப்பதற்கு காங்கிரசுக்கு உரிமையுண்டு என்ற வழக்கமான நிலையிலிருந்துதான் இத் தீர்மானம் இயற்றப்பட்டிருப்பதாக கூறினர்.

தி. மு. க.வுடன் உறவு பற்றிய விஷயம் கூட்டத்தில் பரிசீலனைக்கு வரவில்லை என்றும் தி. மு. க.விரும்பினால் உறவை பற்றி அவர்கள் புனர்பரிசீலனை செய்து கொள்ளலாம் என்றும் திரு. வீரபாகு அறிவித்தார்.

## மதுரையில் கைநெசவாளர் வேலை நிறுத்தம்!

மதுரை, ஜன. 3— கலெக்டர் முன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை மாஸ்டர் வீவர்கள் மீறி விட்டதால் கைத்தறி நெசவாளர்கள் வேலைநிறுத்தம் இங்கு ஜன. 5ம் தேதி காலையிலிருந்து தொடங்குகிறது.

### ஊர்வலம்

ஜன. 5ம் தேதி மாலை 3 மணிக்கு முனிச்சாலையிலிருந்து நெசவாளர் ஊர்வலம் புறப்படும்.

### பொதுக்கூட்டம்

அன்று இரவு 7 மணிக்கு பொதுக்கூட்டம் முனிச்சாலையில் நடைபெறும்.

மதுரை கைத்தறி நெசவாளர் ஐக்கிய குழு கூட்டத்தில் இம் முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

# கோவை தொழிலாளி வர்க்கத்தின் ஒருமைப்பாடு

கோயம்புத்தூர், ஜன. 3— சிம்சன் தொழிலாளர் மீது அடக்குமுறைக்கு கோவை தொழிலாளர் சங்கத் தலைவர்கள் கண்டனம் தெரிவித்துள்ளார்கள். தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்று தீர்வுகாணுமாறும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டு அவர்கள் கூட்டறிக்கை விடுத்துள்ளார்கள்.

சி. ஐ. டி. யூ. தமிழகக் குழு தலைவர் கே. ரமணி, ஐ என். டி.யூ.சி. தமிழக செயலாளர் பி.எல்.சுப்பையா, ஏ.ஐ.டி.யூ.சி.யைச் சேர்ந்த எஸ்.என். காளியண்ணன், ஐக்கிய பஞ்சாலை தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த சி கோவிந்தன், ஆகியோர் விடுத்துள்ள கூட்டறிக்கையில் அமைதியான தொழிற்சங்க நடவடிக்கைகளுக்கு எதிராக கைதுகள், தடியடிகள், கண்ணீர் வாயுக் குண்டுவீச்சு நடத்தி அடக்குமுறையை ஏவிவிட்டிருக்கும் தமிழக அரசின் போக்கை அந்தக் கூட்டறிக்கை கண்டிக்கிறது.

சிம்சன்தொழிலாளர்கோரிக்கைகளுக்கு தமிழகஅரசு விரைவில் தீர்வு காணவிட்டால் சிம்சன் தொழிலாளர்களுக்கு ஆதரவாக கோவைத்தொழிலாளர்கள் நடவடிக்கை எடுப்பார்கள் என்றும் கூட்டறிக்கை எச்சரித்துள்ளது.

# தடையை மீறி சிம்சன் தொழிலாளர் ஊர்வலம்

## உண்ணாவிரதப் போராட்டம் இரண்டு நாட்கள் தள்ளிவைப்பு

சென்னை, ஜன, 3— சிம்சன் தொழிலாளர் போராட்டத்தின் அடுத்த கட்டமாக தடையுத்தரவை மீறி ஊர்வலமாக ராஜபவனுக்குச் செல்லவும் அங்கு கவர்னரிடம் மனுக்கொடுக்கவும் தொழிற்சங்கங்களின் கூட்டுக்கமிட்டி தீர்மானித்துள்ளது. இந்நிலையில் இரண்டு நாட்களுக்கு உண்ணாவிரதப் போராட்டம் நிறுத்திவைக்கப்பட்டுள்ளது.

இதற்கிடையில் புதுக்காங்கிரசைச் சேர்ந்த தொழிற் சங்கத்தலைவர் எஸ். சி. சி. அந்தோணிப்பிள்ளையும், வலது கம்யூனிஸ்ட்கட்சியைச்சேர்ந்த தொழிற் சங்கத்தலைவர் கே. எம். சுந்தரமும் 3ம் தேதி பிற்பகல் கவர்னரைச் சந்தித்து தொழிலாளர்களின் கோரிக்கையை விளக்கினார்கள்.

மவுண்ட் ரேடில் உண்ணாவிரதப் போராட்டத்தை நடத்துவதற்கு ஏராளமான தொழிலாளர்கள் திரண்டிருந்தனர். இந்தக் கூட்டத்தில் பேசிய கூட்டுக்கமிட்டிக் கன்வீனர் பணிவர்மா இரண்டு நாட்களுக்கு உண்ணாவிரதப் போராட்டத்தை நிறுத்திவைக்கும் கூட்டுக்கமிட்டியின் முடிவை விளக்கினார்.

மவுண்ட் ரோடு பகுதியில் போலீஸ் படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. கூட்டம் கூடுவதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையுத்தரவை மேலும் 15 நாட்களுக்கு போலீஸ் நீடித்துள்ளது,

# விவசாய சங்க செயலாளர் அறிக்கை

மதுரை, ஜன. 4— சென்னை சிம்சன் தொழிலாளர்களின் நியாயமான போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும், போராடும் தொழிலாளர்கள் மீது ஏவப்பட்டுவரும் அடக்குமுறைகளைக் கண்டித்தும், விவசாய வேலைகளுக்கான மின் கட்டணம் உயர்த்தப்பட்டுள்ளதை ரத்துசெய்யக்கோரியும் தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் பொதுச்செயலாளர் தோழர் ஆர். ராமராஜ் கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:—

கடந்த மூன்று மாத காலமாக, சென்னையில் உள்ள சிம்சன் குருப்பைச் சேர்ந்த சுமார் 15 ஆயிரம் தொழிலாளர்கள், தி. மு. க. தொழிற் சங்கப் பேரவையால் தங்கள் மீது திணிக்கப்பட்ட துரோக ஒப்பந்தத்தை எதிர்த்தும், அந்த ஒப்பந்தத்தை ரத்துச் செய்யக் கோரியும், தாங்கள் விரும்பும் தலைமையைத் தேர்ந்தெடுக்க தொழிலாளர் பேரவையைக் கூட்டி தேர்தல் நடத்த வேண்டும் என்றும் போராடி வருகின்றனர்.

அவர்களது இந்த நியாயமான கோரிக்கைகளை ஆதரித்து நிறைவேற்றுவதற்குப் பதிலாக சிம்சன் நிர்வாகமும் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்து பழி வாங்குகிறது. தி. மு. க. தொழிற் சங்கப் பேரவையோ போராடும் தொழிலாளர்கள் மீது ரவுடிகளையும் காலிகளையும் ஏவிவிட்டு பலாத்காரத் தாக்குதல் தொடுக்கிறது.

நிர்வாகத்தின் இத்தகைய பழிவாங்கும் போக்கினையும், தி. மு. க. தொழிற் சங்கப் பேரவையின் பலாத்காரத் தாக்குதல் நடவடிக்கைகளையும் கண்டித்து டிசம்பர் 30-ந் தேதி உண்ணாவிரதம் இருப்பதற்கு ஊர்வலமாக வந்த தொழிலாளர்கள் மீது போலீசைவிட்டு தடியடிப் பிரயோகம் செய்தும், கைது செய்தும் உள்ளது.

தொழிலாளர்கள் மீது தி. மு. க. அரசு ஏவியுள்ள இத்தகைய அடக்குமுறைகளையும், இந்த அடக்குமுறைகளை நியாயபபடுத்த தனது அதிகாரங்களையும், அரசு இயந்திரத்தையும், தனது கட்சியையும் பயன்படுத்தி வருவதையும் நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

தொழிலாளர்களின் நியாயமான கோர்க்கையான தி. மு. க தொழிற்சங்கத் தலைவர் திரு. காட்டூர் கோபால் செய்துகொண்ட ஒப்பந்தத்தை ரத்துச் செய்வது; அவர்கள் விரும்பும் தலைமையைத் தேர்ந்தெடுக்க அனுமதிப்பது ஆகியவற்றை நிறைவேற்றுவதுடன், கைது செய்யப்பட்டவர்கள் அனைவரையும் விடுதலை செய்து அவர்கள் மீதுள்ள வழக்குகளை திரும்பப் பெற வேண்டும் என்றும் அடக்குமுறை தடியடி ஆகியவற்றிற்கு பகிரங்க விசாரணை நடத்தப்பட வேண்டும் என்றும் தி. மு க அரசை வற்புறுத்துகிறேன்,

தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காகப் பொராடும் சிம்சன் குருப் தொழிலாளர்களுக்கு ஆதரவு தருமாறு சகல ஜனநாயக சக்திகளையும் இந்திய விவசாய சங்க மையத்தின் தமிழ் மாநிலக் குழு கேட்டுக் கொண்டுள்ளது.

எனவே, தமிழகத்தில் உள்ள விவசாய சங்கக் கிளைகளும், விவசாயத் தொழிலாளர் சங்கக்கிளைகளும், மாவட்ட, வட்ட, கிராம, பிரதேசக் குழுக்களும் ஆங்காங்குள்ள சகல ஜனநாயக சக்திகளுடன் இணைந்து—போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவாகவும், தி. மு. க. அரசின் அடக்கு முறைக்கு எதிராகவும், கிளர்ச்சிகளும் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களும் கண்டனக் கூட்டங்களும் நடத்தும்படி தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் சார்பில் கேட்டுக்கொள்கிறேன்.

## சிறு விவசாயிகளுக்கு மின் கட்டண உயர்வை ரத்து செய்க!

தமிழ்நாட்டிலுள்ள விவசாயிகள், 5 லட்சத்திற்குமதிகமான பம்பு செட்டுகளை உபயோகித்து, விவசாயம் செய்து வருகின்றனர். இவர்களில் பெரும் பகுதியினர் சிறு விவசாயிகளே ஆவர்.

விவசாயத்திற்கு உபயோகிக்கும் மின்சாரத்திற்கு கட்டணத்தை யூனிட் ஒன்றுக்கு 3¼ பைசா வீதம் அதாவது யூனிட் ஒன்றுக்கு 8¾ பைசாவிலிருந்து 12 பைசாவாக தி. மு. க. அரசுஉயர்த்தியுள்ளது.

ஏற்கனவே பெரும்பாலான சிறு நிலக்காரர்கள் லேவாதேவிக்காரர்களின் பிடியில் சிக்கி கடன்சுமையால் அவதிப்படுகின்றனர். விளை பொருட்களுக்கு உத்தரவாதமான நிர்ணய விலை இல்லாததாலும் விவசாயச் செலவுகளும் வாழ்க்கைச் செலவுகளும் பல மடங்குகள் அதிகரித்துள்ளதாலும் இவர்கள் நிரந்தரக்கடன்காரர்களாகவே இருந்து வருகின்றனர்,

இதன் காரணமாகவே, மின் கட்டணங்களை மாதக் கடைசியில்கூட கட்ட இயலாமல் அபராதம் கட்டுகினறனர். அல்லது இவர்களுக்கு மின்இணைப்புத் துண்டிக்கிறது.

இப்படிப்பட்ட நிலையில் உள்ள சிறு நிலக்காரர்கள் உபயோகிக்கும் மின்சாரத்திற்கும் கட்டணத்தை உயர்த்தியிருப்பது இவர்களை மேலும் கஷ்டத்திற்கு உட்படுத்தும் என்பது தெளிவு

எனவே 5 ஏக்கர் வரை நிலமுள்ள சிறு நிலக்காரர்களுக்கு இந்த மின்கட்டண உயர்வை ரத்துச்செய்ய வேண்டுமென்று தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின்சார்பில் ஆர்.ராமராஜ் அரசை வற்புறுத்தியுள்ளார்.

## சிம்சன் தொழிலாளர்களுக்கு ஆதரவாக கோவையில் கண்டன ஊர்வலம்

நாள்: ஜனவரி 6ம் நாள் மாலை 5 மணி.

இடம்; காந்திபுரம் ரோடு

சி. ஐ. டி. யூ. சங்கங்களின் கண்டன ஊர்வலம் நடை பெறும்.

## தீக்கதிர் விற்பனையை அதிகரிக்க

# கட்சித் தோழருக்கும் விற்பனையாளருக்கும் முக்கிய வேண்டுகோள்!

## மார்க்சிஸ்ட் கட்சி தமிழக செயற்குழு அறிக்கை!

தோழரே,

சடந்த சில மாதங்களாக, "தீக்கதிர்" பத்திரிகை தமிழக மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் சிறந்தஆயுதமாக செயல்பட்டு வருவதை நீங்கள் அறிவீர்கள்.

தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், மத்தியதர மக்கள் ஆகிய பல்வேறு பகுதியினரின் கோரிக்கைகளுக்காகப் போராடும் கருவியாக 'தீக்கதிர்" நாளேடு பாடுபட்டு வருகிறது.

மக்கள் மத்தியிலும் தீக்கதிர் நாளேடுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதையும் தமிழகத்தின் பொது வாழ்வில் அது தனது முத்திரையைப் பதித்துக் கொண்டு வருகிறது என்பதையும் நாம் பெருமையுடன் கூற முடியும்.

எனவே, தீக்கதிர் பத்திரிகை மேலும் சிறப்பாகப் பணியாற்றுவதற்குப் பின்வரும் கடமைகளைநிறைவேற்ற வேண்டுமென்று தோழர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

1) தீக்கதிர் ஒவ்வொரு மாவட்டத்திலும் சாத்தியமான அளவு அதிகப்படியான ஏஜெண்டுகளை நியமிப்பதற்கும் அவர்களின் மூலம் பத்திரிகை விற்பனையை விரிவுபடுத்துவதற்கும். பத்திரிகைக்குரிய பில் தொகைகளைக் குறித்த காலத்தில் தவறாது அனுப்புவதற்கும் திட்டமிட்ட—உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

2) ஏஜெண்டுகள் நியமிக்கப்படமுடியாத பிரதேசங்களிலிருந்து, தீக்கதிர் பத்திரிகைக்கு சந்தாதாரர்களைச் சேர்ப்பதற்கு விடாப்பிடியான,தொடர்ச்சியான முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். சிற்றூர்களில் இருக்கக்கூடிய நம் அனுதாபிகள் ஆதரவாளர்கள் ஆகியோருக்கும் தீக்கதிர் பத்திரிக்கை கிடைப்பதற்கு அவர்களைச் சந்தாதாரர்களாகச் சேர்ப்பதுதான் சிறந்த பயனை அளிக்கும்.

3) தமிழகத்தில் நடைபெறும் மக்களின் பல்வேறு இயக்கங்கள் பற்றிய செய்திகள் தீக்கதிர் பத்திரிகைக்கு இடைவிடாது கிடைப்பது மிக மிக அவசியமாகும். ஏற்கனவே, தீக்கதிர் பத்திரிக்கையின் நிருபர்களாக பல தோழர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களுக்கு நிருபர் அடையாளக் கார்டுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. அத்துடன் நமது கட்சியின் மாவட்ட, தாலுகா, டவுண் கமிட்டிகளும், கிளைகளும் உள்ளன.

எனவே, நமது நிருபர்களும் கட்சியின் அமைப்புக்களும் தீக்கதிர் பத்திரிக்கைக்கு இயக்கச் செய்திகளையும், மக்களின் பிரச்சினைகளையும் உடனுக்குடன் செய்தியனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம். செய்திகளை தெளிவாக தாளில் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதி அனுப்பவேண்டும்.

4) இந்தச் செய்திகள் தீக்கதிர் அலுவலகத்திற்கு அன்றாடம் வந்து சேருவது இயக்கத்தை பயனுள்ள வகையில் பிரதிபலிக்க நம் பத்திரிக்கைக்கு உதவி செய்யும் முக்கிய இயக்கங்கள் முக்கிய பிரச்சினைகள் குறித்து மாவட்ட நகர, தாலுகா கமிட்டிகளின் பொறுப்பாளர்கள் விரிவான செய்திக்கடிதங்களை தயாரித்து அனுப்புதல் இன்றியமையாத கடமையாகும்.

5. மக்களைப் பாதிக்கும் பல்வேறு பிரச்சினைகளில் பாதிக்கப்பட்டவர்களின் சொந்த அனுபவத்திலிருந்து நேரடியாக எழுதப்படுகிற "ஆசிரியருக்கு கடிதங்களை" மேலும் அதிக அளவில் நம் பத்திரிகையில் வெளியிட விரும்புகிறோம். உண்மை விபரங்களையும் எழுதுபவரின் விலாசத்தையும் கொண்டு இந்த ஆசிரியருக்கு வரையும் கடிதங்கள் அனுப்பப்பட வேண்டும்.

6. இயக்கங்கள், கிளர்ச்சிகள், போராட்டங்கள் ஆகியவை நடைபெறுகிற பொழுது அவற்றின் முக்கியமானவற்றை, சிரமத்தையும் சிறிது பொருட்செலவையும் பொருட்படுத்தாது, கட்சியின் அமைப்புக்கள் புகைப்படங்களை எடுத்து பத்திரிக்கைக்கு அனுப்புவது தீக்கதிரின் வடிவத்தையும், உள்ளடக்கத்தையும் செழுமைப் படுத்துவதற்குத் தேவைப்படுகிறது.

கட்சிக் கமிட்டிகளின் குறிப்பான கவனம் இந்த அம்சத்தில் செலுத்தப்பட வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்

7. இயன்றளவு பத்திரிக்கைக்கு விளம்பரங்கள் சேர்த்துக் கொடுப்பதற்கு தனிகவனம் தேவைப்படுகிறது. கட்சிக் கமிட்டிகளின் செல்வாக்கு ஏற்ப ஆங்காங்கு இத்துறையிலும் கவனம் செலுத்தி விளம்பரங்களைப் பெற்று அனுப்புவதற்கு நுணுக்கமான முயற்சியில் ஈடுபடும்படி கேட்டுக் கொள்கிறோம். தொழில், வியாபார நிறுவனங்களிடம் முயற்சி செய்வதோடு திருமணம் போன்ற நிகழ்ச்சிகளையும் விளம்பரம் செய்வதற்கு முயற்சி எடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

"கட்சியின் பத்திரிக்கை 'கட்சியின் ஆர்கனைசர்" என்று தோழர் லெனின் கூறியுள்ளதை எல்லாத் தோழர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறோம்.

எனவே, மேலே கூறப்பட்டுள்ள கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றுவதற்கு கட்சியின் மாவட்ட செயற்குழுவிலும், நகர, தாலுகா, பிரதேச கமிட்டிகளிலும், அதேபோல் கட்சியின ஒவ்வொரு கிளையிலும் ஒரு குறிப்பிட்ட தோழருக்குபிரத்தியேகமான பொறுப்பை நிரணயிக்கும்படி வறபுறுத்துகிறோம்.

அந்தத் தோழர், மேலே கூறப்பட்டுள்ள அம்சங்கள் அனைத்தையும் கட்சியின் சார்பில் ஆங்காங்கு கவனிப்பதற்கும், நிறைவேற்றுவதற்கும் தனிப்பெரும் கவனம் செலுத்த வேண்டும் என்றும் இந்தத் தோழருடன் ஒத்துழைக்கும் வகையில் கட்சியின் அமைப்புகளின் தோழர்கள் அனைவரும் ஈடுபாடு கொள்ள வேண்டும் என அறைகூவி அழைக்கிறோம்.

இந்த வேண்டுகோளில் கண்டுள்ள அம்சங்கள் குறித்து ஒவ்வொரு மாவட்ட, தாலுகா, நகரக் கமிட்டியும், கட்சிக் கிளைகளும் விரைவில் விவாதித்து தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

**புரட்சி வாழ்த்துக்கள்,**

மாநில செயற்குழு.

# மத்திய அரசு குறுக்கிடும்?

புது டில்லி, ஜன. 3— சிம்சன் தகராறில் மத்திய அரசு குறுக்கிட்டு நடவடிக்கை எடுக்கும் என்று தெரிகிறது. நாட்டின் பெரிய தொழிற்சங்க அமைப்புகள் கேட்டுக்கொண்டதற்கிணங்க மத்திய தொழிலாளர் அமைச்சர் இந்த விவகாரத்தை தேசிய தொழிலாளர்டிரிபூயனலுக்கு அனுப்புவதற்கு யோசித்து வருவதாக அரசாங்க வட்டாரத் தகவல்கள் கூறுகின்றன.

ஒரு சுயேட்சையான நீதிபதியின் தலைமையிலுள்ள டிரிபூயனலின் பரிசீலனைக்கு விடப்பட்டதும் சிம்சன் தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தத்துக்கு முன்னிருந்த நிலைமை ஏற்படும் சிம்சன் தொழிலாளர் சங்கத்தை இயக்குவதில் அரசு அதிகாரம் பயன்படுத்தப்பட்டது என்ற குற்றச்சாட்டு உள்ளிட்ட எல்லா விஷயங்களையும் டிரிபூயனல் பரிசீலிக்கும். இவ் விஷயம் டிரிபூயனலின் பரிசீலனைக்கு விடப்படுவதால் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் பழிவாங்கப்பட மாட்டார்கள் என்றும் கூறப்படுகிறது.

தீக்கதிர்

# தொழில் உறவும் ஜனாதிபதி அறிவுரையும்

நாட்டில் சுமுகமான தொழில் உறவு நிலைமையை உண்டு பண்ணுவதற்கு வேலை நிறுத்தங்களையும், கதவடைப்புகளையும் மூன்று ஆண்டுகளுக்கு நிறுத்தி வைக்க வேண்டும் என்று ஜனாதிபதி வி. வி. கிரி யோசனை தெரிவித்துள்ளார்.

எல்லா வேற்றுமைகளையும் பேச்சுவார்த்தை மூலம் தீர்த்துக் கொள்ளவும், வேலைநிறுத்தங்களிலோ, கதவடைப்புகளிலோ இறங்காமலிருக்கவும் சபதம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் ஜனாதிபதி கிரி தொழிலாளர்களையும், முதலாளிகளையும் கேட்டுக் கொண்டுள்ளார்.

நாடு முழுவதிலும் தொழிற்சாலைகள் வருடக்கணக்கில் மூடிக் கிடக்கின்றன. உழைக்கும் மக்களின் வாழ்க்கைத்தரம் வீழ்ச்சியடைந்து கொண்டே போகிறது.

இந்த நெருக்கடியான நேரத்தில்தான் ஜனாதிபதி இவ்வாறு அறிவுரை கூறியுள்ளார்.

மூடிக்கிடக்கும் தொழிற்சாலைகளைத் திறக்கக் கோரியும், குறைந்த பட்சம் 8·33 சதவிகிதம் போனஸ் கிடைப்பதற்கும் லாபத்துக்கேற்ற போனஸ் கிடைப்பதற்கும் போனஸ் சட்டத்தை திருத்தக் கோரியும் மத்திய தொழிற்சங்க அமைப்புகள் ஒன்று பட்டு நாடெங்கும் கிளர்ச்சி செய்தன.

குறைந்தபட்ச போனஸ் வரம்பை உயர்த்துவதற்கு மத்திய அமைச்சர் கொடுத்த வாக்குறுதிகூட இன்னும் நிறைவேற்றப்படவில்லை. இது சம்பந்தமாக தொழிற்சங்க தலைவர்களிடம் மத்திய தொழிலாளர் அமைச்சர் கொடுத்த வாக்குறுதி பெரு முதலாளியான டாட்டாவின் மிரட்டலுக்குப்பின் பறந்து போய்விட்டது.

நியாயமான போனசுக்காக கோவையிலும், அகமதாபாத்திலும், பம்பாயிலும், நாகபுரியிலும் மற்றும் பல நகரங்களிலும் நீண்ட வேலைநிறுத்தப் போராட்டங்கள் நடைபெற்றன.

குறைந்தபட்ச போனஸ் வரம்பை உயர்த்துவதற்குக்கூட முதலாளிவர்க்கம் முன்வராமலிருக்கும் போது தான் பேச்சுவார்த்தை மூலம் தகராறுகளையெல்லாம் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று நீண்ட காலமாக தொழிற்சங்க இயக்கத்துடன் தொடர்பு கொண்டிருந்த ஜனாதிபதி கிரி யோசனை கூறியுள்ளார்.

வேலைநிறுத்தத்தைத் தவிர்க்கவும், சுமுகமான முறையில் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ளவுமே தொழிலாளி வர்க்கம் விரும்புகிறது. ஆனால் இந்த முறையில் தீர்வு காண்பதற்கு வழியிருக்கிறதா?

ஊதியத்தை வெட்டவும், வேலைப் பளுவை உயர்த்தவும் முதலாளிகள் கதவடைப்புச் செய்கிறார்கள்.

இதைத் தடுப்பதற்கோ, மூடிக்கிடக்கும் தொழிற்சாலைகளை ஏற்று நடத்துவதற்கோ அரசு முன்வரவில்லை.

மூடிக்கிடக்கும் தொழிற்சாலைகளை திறப்பதற்கு மத்திய, மாநில அரசுகள் விதிக்கும் நிபந்தனைகள் என்ன?

கிராக்கிப்படியை வெட்டவும் தொழிற்சட்டங்கள் அமுலாவதை நிறுத்தி வைக்கவும் சட்டங்கள் வந்துள்ளன.

முதலாளிகள் கொள்ளை லாபம் அடிப்பது பெருகிக் கொண்டே போகிறது. உழைக்கும் மக்கள் தலையில் மட்டும் சுமை ஏறிக்கொண்டேபோகிறது.

நம் நாட்டின் 101 பெரிய கம்பெனிகளின் சொத்து மதிப்பு 1968–69-ம் ஆண்டில் ரூ. 2815·5 கோடியிலிருந்து 1969—70-ல் ரூ. 3046·6 கோடியாக உயர்ந்திருக்கிறது. இவ்வாறாக ஒரே ஆண்டில் சொத்து மதிப்பு 8·1 சதவிகிதம் உயர்ந்திருக்கும்போது தொழிலாளர்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்துள்ளதாகக் கூற முடியுமா?

1963-ம் ஆண்டிற்கும் 1969-ம் ஆண்டிற்கும் இடையே தொழிலாளர்களின் பணமாகக் கிடைக்கும் சம்பளம் அதிகரித்தாலும் உண்மைச் சம்பளம் குறைந்துள்ளது. 1963-ல் தொழிலாளர்களின் பணமாகக் கிடைக்கும் சம்பளம் 109 புள்ளியிலிருந்து 1968-ல் 169 புள்ளியாக உயர்ந்தது - ஆனால் உண்மைச் சம்பளம் 103 புள்ளியிலிருந்து 95 புள்ளியாகக் குறைந்துள்ளது.

இந்திரா அரசாங்கம் பெரு முதலாளிகளுக்கு எவ்வளவு பக்கபலமாக இருக்கிறது என்பதை பிரதமர் இந்திராகாந்தி "ஜெர்மன் இண்டர் நேஷனல்" என்ற பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் கூறியிருப்பதே அம்பலப்படுத்துகிறது. அப்பேட்டியில் கீழ்வருமாறு திருமதி இந்திரா காந்தி கூறியுள்ளார்:—

"பெரு முதலாளிகள் பணம் சேர்ப்பதை நான் எதிர்க்கவில்லை என்ருலும் சிலர் யதார்த்த நிலைமைக்கு புறம்பாக அளவுக்கு மீறி லாபமடிக்க விரும்புவதால்தான் தொல்லை ஏற்படுகிறது. அவர்களில் பலர் அரசாங்கக் கொள்கைகளை எதிர்த்தாலும் அரசாங்கத்தின் தற்போதைய திட்டம் ஏழை மக்களிடையே அதிருப்தி ஏற்படுவதற்கான காரணங்களை அகற்றி பெரு முதலாளிகளைப் பலவழிகளில் பாதுகாக்கிறது என்பதை அவர்கள் உணர வேண்டும்" என்று கூறியுள்ளார்.

நெருக்கடி நிலையிலும் முதலாளிகள் கொள்ளை லாபத்துக்கு அரசாங்கம் உறுதுணையாக இருக்கிறது. இந்நிலையில் ஜனாதிபதி முதலாளிகளையும் தொழிலாளர்களையும் ஒரே நிலையில் வைத்து உபதேசிக்கிருர். இந்த உபதேசத்துக்கு முதலாளிகள் கட்டுப்படுவார்கள் என்று நம்பி தொழிலாளி வர்க்கம் தன்னுடைய வேலைநிறுத்த ஆயுதத்தைக் கீழே போட முடியுமா?

# சட்ட பாதுகாப்புகள் நிலப்பிரபுவுக்கே!

## சமுதாய மாற்றமில்லையேல் உழவர்களுக்கு விடுதலை இல்லை!

**விவசாயிகளைப் பாதுகாக்க என்று எத்தனையோ சட்டங்கள் வந்தன. அத்தனை சட்டங்களும் விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளர்களையும் நசுக்கவே பயன்படுத்தப்படுகின்றன என்பதை இக்கட்டுரை விளக்கமாகக் கூறுகிறது.**

**ஜி. சண்முகம்,**
உதவித் தலைவர்,
தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கம்

தொழிலாளர்கள் கடுமையாக உழைக்க வேண்டும், உழைத்து உற்பத்தியைப் பெருக்கினால் தான் வறுமை போகும். நாட்டில் செல்வமும் செழிப்பும் ஏற்படும் என்று ஆட்சியில் உள்ளவர்கள் தினசரி பேசுவதைக் கேட்கிறோம். வேலை இன்மையை போக்க அடிப்படையாக எதையுமே செய்யாமல் ஆளவந்தவர்கள் எல்லோருமே திரும்பத் திரும்ப இதையே கிளிப்பிள்ளைகள் போல் திரும்பத் திரும்பக் கூறுகிறார்கள்.

படித்தவர்கள், பட்டதாரிகள், ஆசிரியர்கள், என்ஜினியர்கள். இப்படி பல லட்சக்கணக்கில் வேலை இல்லாதவர்கள் இருப்பதாக அரசாங்க குறிப்புகளே கூறுகின்றன. படித்து பட்டம் பெற்ற பிறகு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் படித்த வாலிபர்கள் சோர்வடைந்து, இனி நமக்கு வாழ்வில்லை என்று தற்கொலையில் நாட்டம் கொள்ளுவதையும் பார்க்கிறோம். இவர்களுக்கு வேலை கொடுக்க அரசு உருப்படியான நடவடிக்கைகள் எடுக்காமல் "உழைக்க வேண்டும்" என்று கூறுவது வேடிக்கையானதாகும்.

### லாபமே குறி

தனிப்பட்ட முதலாளிகளின் லாபத்தைப் பெருக்கும் கொள்கையைத் தான் இன்று அரசாங்கம் பின்பற்றுகிறது. லாபம் அதிகம் கிடைக்கும் தொழில்களையும்—வளர்ச்சியடைந்த பகுதிகளில் தொழில் துவக்கினால் எளிதில் லாபம் அதிகம் கிடைக்கும் என்பதால் தொழில் வளர்ச்சியடைந்த பகுதிகளிலேயே தொழில்கள் துவக்கப்படுகின்றன.

பின்தங்கிய பகுதிகள் எந்த வித மாற்றமுமின்றி வறுமையில் வாடும் அவலப் போக்கு தான் நீடிக்கிறது. கிராமப்புறங்களில் வேலையற்றவர்கள் எண்ணிக்கையை அளவிட முடியாது.

### நஞ்சை நிறைந்த தஞ்சை நிலை

தஞ்சை மாவட்டம் பூராவும் பெரும் தொழில்கள் எதுவும் இல்லை. விவசாயத்தையே நம்பி இருக்கிறது, இம்மாவட்டத்தில், பெரும்பாலும் கிராமங்கள் தான் அதிகம். நகரங்கள் என்று சில இருந்தாலும் அதில் தொழில் வசதி என்பதில்லை. கிராமப்புற நிலப்பிரபுக்கள் சொகுசான வாழ்க்கைநடத்த நகரங்களில் வசிக்கிருர்கள்.

### டிராக்டர்களின் விளைவு

சட்டத்தின் ஓட்டைகளை உபயோகப்படுத்தி பட்டா மாற்றங்கள் செய்து, ஏராளமான நிலத்தைத் தன் கையில் வைத்திருக்கிருர்கள். நவீன விவசாயம் செய்து உற்பத்தியைப் பெருக்குகிறோம் என்று கூறி டிராக்டர்களை அதிக அளவில் உபயோகப்படுத்துகிருர்கள். இதன்மூலம் கிராமப்புற உழைக்கும் மக்களுக்கு அரை குறையாகக் கிடைத்துவந்த வேலையும் குறைந்து வருகிறது. ஒரு டிராக்டர் நூறு ஆட்கள் செய்யும் வேலையைச் செய்து முடித்துவிடும். பெரும்பாலான வேலைகள் டிராக்டர் மூலமே நடக்கிறது.

தொழிலாளர்கள் என்றால், கூலி கேட்பார்கள் உரிமை கோருவார்கள்! போராட்டம் நடத்துவார்கள். ஆனால்டிராக்டர்களோ கூலி கேட்காது, கொடி பிடிக்காது, கோஷம் எழுப்பாது அல்லவா! நிலப்பிரபுக்கள் டிராக்டர்களை வாடகைக்கு விடுவதன் மூலமும் ஏராளமான இலாபத்தைப் பெறுகிருர்கள். டிராக்டர்களின் வருகையால் வேலை இன்மை வேகமாக வளர்கிறது.

### சுரண்டல்

நில உடைமையாளர் என்ற முறையில் நிலப் பிரபுக்கள் குத்தகையாகவும், வாரமாகவும், வாடகையாகவும் கிராமப்புறச் செல்வங்கள் அனைத்தையும் சுரண்டி நகரங்களுக்குக் கொண்டுவந்து விடுகிருர்கள் இதனால் கிராமங்களின் மூலமாக கிடைக்கும் லாபத்தால் அபிவிருத்தி இல்லாமலேயே போய்விட்டது. இதர காலங்களில் மராமத்து போன்ற வேலைகளும் இல்லாமல் போய் விட்டது. இவைகள் எல்லாம் வேலை இல்லாமையை வேகமாக வளர்க்கிறது.

### சிறுநிலக்காரர்களின் அவலநிலை!

பசுமை புரட்சியின் பெயரால் விவசாயத்தை இயந்திரமயமாக்குவதால் சிறு நிலக்காரர்கள் தங்கள் நிலவுடமையான சிறுபகுதிகளையும்இழந்து கூலிப்படையின் அணியில் வேகமாக சேர்ந்துக் கொண்டிருக்கிருர்கள். இதைத் தடுத்து நிறுத்த முடியாது. விவசாயத்தில் முதலாளித்துவ வளர்ச்சியின்தோற்றம்வெளிப்படையாக் தெரிகிறது.

விவசாயத்தில் முதலாளித்துவ வளர்ச்சியின் காரணமாக சிறு நிலக்காரர்கள் நிலத்தை இழக்கவும்—வசதி படைத்தவர்கள் இயந்திரத்தின் மூலம் தங்கள் வேலைகளை முடித்துக் கொள்ளவும் முடிகிறது. இயந்திரக்கலப்பை, குழாய்க் கிணறுகள் மூலம் சாகுபடி வேலையை முன் துவக்கி, குறைந்த கூலிக்கு வேலை செய்ய ஆட்களை அமர்த்தி அதிக லாபம் பெறுகிருர்கள். சிறு நிலக்காரர்கள் வேலை துவங்க வேண்டுமானால், மேட்டூர் தண்ணீர் வருவதை எதிர்பார்க்க வேண்டும். இவர்கள் வேலை துவங்கும்போது ஆட்கள் கூலி உயர்ந்திருக்கும். காலதாமதமாக சாகுபடி செய்வதால் மகசூல் குறையும். காலபிற்பாடாக அறுவடை நடப்பதால் விலை மிகவும் குறைந்திருக்கும். இந்தக் காரணங்களாலும், கடன் வாங்கியே விவசாயம் செய்ய வேண்டியதிருப்பதாலும் தங்களுடைய தானியங்களை குறைந்த விலைக்கே விற்க வேண்டியுள்ளது. இவைகள் எல்லாம் சிறு நிலக்காரர்களை அழிக்கும்—கிராமப்புற வேலையற்றவர்களை வளர்க்கும் ஆயுதங்களாக அமைந்திருக்கிறது.

### குத்தகை உயர்நிலை என்ன?

குத்தகை சாகுபடி செய்யும் விவசாயிகள் ஒவ்வொரு ஆண்டும் ஏற்படக் கூடிய இயற்கை பாதிப்பால்வெள்ளம் பூச்சி போன்றவைகளின் தாக்குதலால் குத்தகை நெல் அளக்கமுடியாமல், குத்தகை பாக்கி தேங்கி நிற்கிறது. கடன் வாங்கியே விவசாயம் செய்ய வேண்டி இருப்பதாலும் விளைவில் ஏற்படும் பாதிப்பாலும் உரிய காலத்தில் கடன் கொடுக்க முடியாமல் அவதிக்கு ஆளாகவேண்டியுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் இப்படி பாதிப்புகள் வருவதும், அது விவசாயிகளை மேலும் மேலும் கடன்காரர்களாக மாற்றிக் கொண்டே இருக்கிறது.

### விவசாயிகளுக்கு சட்டப்பாதுகாப்பு உண்டா?

விவசாயிகளுக்கென்று பாதுகாப்புச் சட்டம் எதுவும் இல்லாததால்களத்து மேட்டிற்கே சென்று, அறுவடையான நெல் பூராவையும் எடுத்துக்கொள்வார்கள். குத்தகை பாக்கிக்கென்று வைக்கோலையும் உழவு மாட்டையும் கூடப் பிடித்துக் கொள்வார்கள். ஆண்டு பூராவும் குடும்பத்தோடு உழைத்த விவசாயி, பிச்சைக்காரனைபோல மிராசுதார் வீட்டு வாசலில் நின்று கும்பிடு போடவேண்டும்அடுத்தஆண்டு சாகுபடி செய்வதற்கு! இது பாதுகாப்பு சட்டம் இல்லாத காலத்தில் நிலப்பிரபுக்கள் அட்டைபோல் உறிஞ்சிய முறை.

### இன்றும் கூட

இன்றைய நிலை என்ன? அறுபது நாற்பது சட்டம், 48க்கு அறுபது வாரச்சட்டம் குத்தகைதார் பாதுகாப்புச் சட்டம்...இப்படி பல சட்டங்கள் வந்த பிறகு, எந்த விவசாயிகளுக்கும் களத்து மேட்

(4-ம் பக்கம் பார்க்க)

**நாசரேத்**

## மின் ஊழியர் சங்கக் கூட்டம்

திருச்செந்தூர், டிச 31—

தமிழ்நாடு மின் குழு ஊழியர்கள் சங்கத்தின் கிளைக் கூட்டம் நாசரேத் விநியோகப் பிரிவில் தோழர் வெங்கடாசலம் வயர்மேன தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் சங்க நிர்வாகிகளான தோழர்கள் சிவஞானம், ராஜாமணி, கணபதிராமன் ஆகியோர் மத்திய அமைப்பின் சாதனைகளைப் பற்றியும், சி.ஐ.டி.யூ. இணைப்பின் அவசியத்தைப் பற்றியும் விளக்கமாக பேசினார்கள். மேலும் இன்றைய நிலையில் உள்ள தொழிலாளர்களின் பிரச்னைகளை பற்றி விளக்கிப்பேசினார்கள். ஜனவரி 7ந்தேதியில் சங்க விளக்கக் கூட்டமும் கையெழுத்து இயக்கம் நடத்த வேண்டியது பற்றியும் பேசினார்கள்.

### தீர்மானங்கள்

பின்னர்திருநெல்வேலி மின் திட்டமேற்பார்வை பொறியாளரின் நேர்முக உதவியாளர் தொழிற்சங்க முக்கியஸ்தர்களைத் தரக்குறைவாகவும் மரியாதைக் குறைவாகவும் பேசியதைக் கண்டித்தும், ஸ்ரீவைகுண்டம் உதவி மின் பொறியாளர் (கட்டுமானம்) ஸ்ரீவைகுண்டம் கட்டுமான சி. எல். ஆர். தொழிலாளர்களுக்கு வேலைசெய்தும் ½ நாள்சம்பள வெட்டுசெய்த அவரின் தொழிலாளர் நல விரோதப் போக்கை கண்டித்தும், நாசரேத் கட்டுமானப் பிரிவு சி. எல். ஆர். தொழிலாளர்களுக்கு உடனடியாக மீண்டும் வேலை கொடுக்க மேற்பார்வையின் பொறியாளரைக் கேட்டுக் கொண்டும், சி. எல். ஆர். தொழிலாளர்களுக்கு குறிப்பிட்ட தேதியில் சம்பளம் பட்டுவாடா செய்யப் படவேண்டுமென அதிகாரிகளை கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள்நிறைவேற்றப்பட்டது மேலும் சங்கரன் கோவிலில் வேலை பார்க்கும் போது மின் விபத்துக்குள்ளாகி உயிர் துறந்த கோனார் வயர்மேனுக்கு அஞ்சலி செலுத்தியும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

# குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தில் ஊழல்கள்!

## ஊராட்சிமன்ற தலைவர்கள் அறிக்கை

### முதலமைச்சர் அவதூறுக்குக் கண்டனம்

திருவாரூர், ஜன. 3—

குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்துக்கு நிர்ப்பந்தம் செய்யப்படுவதையும் இதற்கு ஆள் பிடித்து வருமாறு அரசு ஊழியர்கள் கட்டாயப் படுத்தப்படுவதையும், இது சம்பந்தமாக எழும் புகார்களுக்குநேரடியாகபதில் அளிக்காமல் முதலமைச்சர் அவதூறுசெய்ய முயற்சிப்பதையும் கண்டித்து தஞ்சை மாவட்டத்திலுள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஊராட்சி மன்றத் தலைவர்கள் அறிக்கை விடுத்துள்ளார்கள்.

இந்த ஊராட்சி ஒன்றியத் தலைவர்களின் கூட்டம் திருவாரூரில் டிச. 30, 31 தேதிகளில் நடைபெற்றது. அக்கூட்டத்தில் கீழ்க்கண்டவாறு தீர்மானம் இயற்றப் பட்டுள்ளது.

குடும்ப 'நல்வாழ்வுதிட்டம்' என்ற பெயரில் தஞ்சை மாவட்டத்தில் 1—12—71 முதல் 10-1-72வரை ஓர் இயக்கமாக 'அறுவை சிகிச்சை' க்கு ஆள் பிடிக்கும் ஏற்பாடு நடை பெற்று வருகிறது.

மாவட்டம் பூராவும்-கூட்டு மன்ற அலுவலகங்கள் நடைமுறையில் மருத்துவ மனைகளாகவே மாற்றப்பட்டிருக்கிறது. நிர்ணயிக்கப் பட்டிருக்கும் தொகையை விட அதிக பணம் தருவதாகவும்-புலால் உணவு, புது உடை, போக்குவரத்துச் செலவு, மற்றும் ரேடியோ, பவுன் மோதிரம், சூட் கேஸ் ஆகிய பரிசுப் பொருள்கள் வழங்குவதாகவும், சாதாரண ஏழை மக்களை, அவர் தம் வறுமை நிலையை, அறியாமையை உபயோகித்து ஏமாற்றி ஆள் சேர்க்கிருர்கள். இம்மாதிரியான முறை வன்மையான கண்டனத்திற்குரியது.

இதற்கான சட்டப்பூர்வமான நிதி ஒதுக்கீடுகளை விட, அதிகமான தொகை பஞ்சாயத்து நிதியிலிருந்து அதிகாரிகள நிர்ப்பந்தத்தால் வசூலிக்கப்படுகிறது. இந்தப் பணம் சட்டபூர்வமற்றதால் கள்ள கணக்கிற்குரியதே. அதிகாரிகளே ஊழல், லஞ்சம் நடைமுறைக்கு ஏன் கையாடல் ...ளுக்கே வழிகாட்டியாக விருக்கிருர்கள்.

### அரசு ஊழியர்கள் மீது நடவடிக்கை

அறுவை, சிகிச்சைக்கு ஆள் சேர்க்க, கிராம நல ஊழியர்கள், ஆசிரியர்கள், ரெவின்யூ அதிகாரிகள் நிர்ப்பந்த முறையில் ஈடுபடுத்தப்படுகிருர்கள். ஊழியர்களின் முன்னேற்றம், ஊதிய உயர்வு இவைகள் பாதிக்கப்படுமென்று உயர் அதிகாரிகளால் அச்சுறுத்தப் படுகிருர்கள். ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டும், தற்காலிக நீக்கம் செய்யப்பட்டுமிருக்கிறது. இந்தக் காலம் பூராவும் கல்வி, ரெவின்யூ, பஞ்சாயத்து அபிவிருத்தி ஆகிய இலாக்காக்களின் அன்ருட நிர்வாக-சட்ட பூர்வ கடமைகளை நிறைவேற்றவேயில்லை. கடுமையாக பாதிக்கப்பட்டது கல்வி நிலையங்களே. இதில பெண் ஆசிரியைகளின் நிலை பெரும் வேதனைக்குரியதே. கூட்டு மன்றபெருந்தலைவர்கள், ஆணையர்கள், பஞ்சாயத்துக்குரிய அபிவிருத்தி வேலைகள் திட்டமிட்ட ரீதியில் தடைபடுமென்றும், இந்த இயக்கத்தில் ஈடுபட்டால், அதுவும் 20நபர்கள் கொண்டு வந்தால் ரூ, 3000 பொது நிதியிலிருந்து ஒதுக்கீடு செய்து விசேஷ வேலைத்திட்டம் நிறைவேற்றப்படுமென்று பகிரங்கமாக செம்பனார் கோவில் கூட்டுமன்ற பெருந் தலைவர் சுற்றறிக்கை விடுமளவிற்கு நிலைமை மோசமாக இருக்கிறது.

நிலைமைகள், இவ்வாறிருக்க முதல்வர் தனது(30—12—71) 'குடும்பக்கட்டுப்பாடு" பிரசங்கத்தில் இதில் ஏற்பட்டிருக்கும் குறைபாடுகளுக்கும் முறைகேடுகளுக்கும் நேரடியாக பதில் அளிக்க திராணியற்று அவருக்கே உரிய அவதூறுப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிருர்.

இயல்பான விருப்பம், தேக ஆரோக்கிய காரணங்களால் இந்த திட்டத்தில் மக்களை ஈடுபட ஊக்குவிக்காமல் நாட்டின் சகல சமூகப் பொருளாதார பிரச்னைகளுக்கும் ஒரு "சர்வ ரோக நிவாரணியாக" பிரமாதப் படுத்துவதும், அரசு இயந்திரத்தையும், கூட்டுமன்ற நிறுவன நிதிகளையும், அரசு மான்யங்களையும் இதற்காக துஷ்பிரயோகப்படுத்துவதையும், நிதி சேகரிக்கும் ஊழல் நடைமுறையும், ஏழை மக்களின் வறுமையும், அறியாமையையும் பயன்படுத்தி ஏமாற்றுவதையும் ஊராட்சியை அச்சுறுத்தும் ஏற்பாடுகளில் ஈடுபடுத்துவதையும் இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது. அறுவை சிகிச்சை இஷ்டபூர்வமானதாகவேயிருக்க, கட்டாய முறைகள் பூராவும் கைவிட வேண்டுமென்று இக்கூட்டம் அரசினரைக் கேட்டுக்கொள்கிறது.

### விவசாயசங்கம் அமைப்பு

திருச்சி, ஜன, 2—

திருமயம் தாலுகா, மூலாங்குடி வட்டம் ரெட்டியபட்டியில் டிசம்பர் 22-ம் நாள் விவசாய சங்கம் அமைக்கப் பட்டது. தோழர் கே. சின்னையன் அமைப்புக் கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

## ஆசிரியருக்கு வரையும் மடல்

### முதலாளிகள் கொள்ளையடிக்க அரசாங்கத்தின் உடந்தை

அன்புள்ள ஐயா,

100 கிலோ கொண்ட நெல் மூட்டைக்கு ரூ 50 என்று கொள்முதல் விலை நிர்ணயிக்கப்பட்டு உணவுக் கார்ப்பரேஷன் நெல் வாங்குவது உண்மை ஆனால் நாம் கடைத் தெருவில் அரிசி படி 2-50 என்று தான் வாங்குகிறோம் இடையே இருக்கும் லாபம் மொத்த வியாபாரிக்கும் அரிசி ஆலை முதலாளிக்கும் போய்ச் சேர்கிறது. உணவு கார்ப்பரேஷன் சில்லரை வியாபாரத்தில் ஈடுபடாது அவ்வாறு அது ஈடுபட்டால் பெரு நிலக்கிழார்களும், பெரிய வியாபாரிகளும் பாதிக்கப்படுவார்கள் என்பது அரசாங்கத்துக்கு தெரியும்.

மூன்ருவதாகத் தொழில் துறையை எடுத்துக் கொண்டால் இந்திய முதலாளிகளுக்கு வேண்டிய மூலப்பொருள்களை மட்டுமே பொதுத்துறை நிறுவனங்கள் தயார் செய்கின்றன ஆனால் பொது மக்களின் அன்ருட உபயோகப் பொருள்களை அரசு தயாரிப்பது இல்லை. உதாரணமாக மின் விசிறி, கார், லாரி, டைப்ரைட்டர், இரும்பு பீரோ, அலமாரி, பிற இரும்பு சாமான்களைத் தயாரிப்பதற்கான மூலப் பொருள்களைக் குறைந்த விலைக்கு அரசாங்கத்திடமிருந்து வாங்கிப் பின்னர் அதே அரசாங்கத்தின் ஒப்பந்தம் மூலம் உயர்ந்த விலைக்கு பெரும்பகுதி அரசாங்கத்திற்கே இந்திய முதலாளிகள் விற்றுக் கொள்ளை லாபம் அடிக்கிருர்கள். இதன் காரணமாகப் பொதுத் துறை நஷ்டத்தில் செயல்படுகிறது. இவ்வாறு மக்கள் பணம் திரும்பவும் முதலாளிகளிடமே போய்ச் சேருகிறது.

தங்களன்புள்ள,
ஆர். சங்கரநாராயணன்

### முதலமைச்சரின் விளம்பரப் பிரியம்

அன்புடையீர்,

நான் 28-12-71 அன்று திருச்சியில் ராமகிருஷ்ணு தியேட்டருக்கு திரைப் படம் காணச் சென்றிருந்தேன். அங்கு இடைவேளை என்ற அறிவிப்பைத்தொடர்ந்துமுன்னாள் இராணுவத்தினர்க்குரிய கொடிநாளைப் பற்றி தமிழக முதலமைச்சர் கருணாநிதி தோன்றிப் பேசினார். நான் உட்பட அங்கிருந்த பெரும்பாலோரை அப்பேச்சு பொறுமையிழக்கச் செய்தது. ஏனெனில் உட்கார்ந்த நிலையிலேயே இரண்டுமூன்றுமுறை குறிப்புத் தாளைத் திருப்பித் திருப்பிப் பேசிய அந்தப்பேச்சு ஒரு ரீல் முழுவதுமிருந்தது. 10 ஆம் வகுப்பு தமிழ்ப்பாடப் புத்தகத்திலுள்ள, முதலமைச்சர் முன்னாள் இராணுவ வீரர்கள் கொடி நாள் பற்றி ஒருபாடம் முழுதுமே அவரால் பேசப்பட்டது! தாய்த்திரு நாட்டுக்காகத் தங்களது உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணித்த வீரர்களின் தன்னலமற்ற தியாகத்தின் பின்னணியை முதலமைச்சரின் விளம்பரத்துக்காக பயன்படுத்தாது விட்டிருக்கக்கூடாதா?

இப்படிக்கு,
தோழமையுள்ள,
வாசுகி.

### பிழைத் திருத்தம்

தீக்கதிர் 29—12—71ம் தேதி இதழில் சிம்சன் தொழிலாளர் போராட்டத்தைப் பற்றிய செய்தியில் சி.ஐ.டி.யூ. எச்.எம்.எஸ்., ஏ.ஐ.டி.யூ.சி. சங்கங்களின் பெயர்களுடன் சென்னை செங்கல்பட்டு தொழிற்சங்க கவுன்சிலின் பெயர் அச்சுப் பிழையினால் விடப்பட்டதற்கு வருந்துகிறோம். குசேலர் தலைமையிலுள்ள இந்தச் சங்கத்தின் பெயரையும் சேர்த்து வாசிக்க வேண்டுகிறோம்.

# சிம்சன் தொழிலாளர் போராட்டம்!

## இந்திய மாணவர் சம்மேளனம் ஆதரவு

சென்னை, ஜன. 1— சிம்சன் தொழிலாளர்களின் போராட்டத்திற்கு இந்திய மாணவர் சம்மேளனம் ஆதரவு தெரிவித்து இருக்கிறது. இது சம்பந்தமாக மாணவர் சம்மேளனத்தின் துணைத் தலைவர் என். ராம் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார், அந்த அறிக்கையில் அவர் கூறி இருப்பதாவது:—

தங்கள் உரிமைகளுக்காக சிம்சன் தொழிலாளர்கள் நடத்தும் போராட்டத்துக்கு மாணவர் சம்மேளனம் முழு ஒத்துழைப்புத் தருகிறது. சிம்சன் தொழிலாளர் போராட்டத்துக்கு ஆதரவாக வேலை நிறுத்தம் செய்யவும், தொழிலாளர் ஆர்ப்பாட்டம், கூட்டங்களில் கலந்து கொள்வதென்றும் அவர்களுக்கு ஆதரவுதிரட்டுவது என்றும் மாணவர் சம்மேளனம் உறுதி அளிக்கிறது. தொழிலாளர் பக்கமே நியாயம் இருக்கிறது என்பது தமிழகத்தில் உள்ள ஒவ்வொரு பள்ளி, கல்லூரியிலும் விளக்கப்படவேண்டும்.

தற்போது ஏற்பட்டுள்ள இந்த சிக்கலுக்கு தி.மு.க. அரசும், சிம்சன் நிர்வாகமுமே முழுப்பொறுப்புஆகும்.

தொழிலாளருக்குப் பிடிக்காத தலைவரை மாற்றவும், ஒப்பந்தத்தை ரத்துசெய்யவும் போராடினால், அவர்களை தி.மு.க குண்டர்கள் தாக்குகிறார்கள்.

இந்த சிம்சன் பிரச்சினை மூலம், முதலமைச்சர் கருணாநிதியும் அவரது அரசும் தங்கள் மக்கள் விரோதக் கொள்கையைத் தெளிவாக்கிவிட்டார்கள். இதற்கு முன்பும் பலமுறை தொழிலாளர், விவசாயிகள் பிரச்சினைகளில் இந்த அரசு அனுவசியமாகத் தலையிட்டு, அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டு இருக்கிறது.

உரிமைக்காகப் போராடும் சிம்சன் தொழிலாளரை மாணவர் சம்மேளனம் வாழ்த்துவதுடன், அவர்களுக்கு முழு ஒத்துழைப்பம் கொடுப்பதாக உறுதியளிக்கிறது.

இவ்வாறு ராம் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## விவசாயப் பெருமக்களே திரண்டெழுவீர்!
### தஞ்சை விவசாயத் தொழிலாளர்சங்க செயலாளர் அறிக்கை

திருவாரூர், ஜன. 3— சிம்சன் தொழிலாளர் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவிதது தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் கோ. வீரய்யன் ஓர் அறிக்கை விடுத்துள்ளார். அதில் குறிப்பட்டிருப்பதாவது:—

கடந்த 3 மாத காலமாக தமிழகத்தின் தலைநகரம் சென்னையில் இருக்கும் சிம்சன் குரூப்பைச் சேர்ந்த 15ஆயிரம் தொழிலாளர்கள் தி. மு. க. தொழிலாளர் பேரவையால் தங்களின் மீது திணிக்கப்பட்டிருக்கும் துரோக ஒப்பந்தத்தை எதிர்த்தும், அது ரத்துச் செய்யப்பட வேண்டும் என்றும்—தாங்கள் விரும்பும் தலைமையை எடுக்க அனுமதிக்க வேண்டும் என்றும் உறுதியாக போராடி வருவது தமிழகம் பூராவும் அறிந்தது தான். அவர்களை அடக்க சிம்சன் நிர்வாகமும், அரசும், காவல் துறையும் சேர்ந்து கடுமையான அடக்கு முறையில் ஈடுபட்டு இருக்கிறதும் 15 ஆயிரம் உழைக்கும் வர்க்க குடும்பங்கள் 3மாதகாலமா வேலையில்லாமல் வேதனைக்கும் அடக்குமுறைக்கும் ஆளாக்கப் படுவதைத் தடுத்து நிறுத்தவும் தமிழகம் பூராவும் இருக்கும் தொழிலாளர்கள் ஆதரவு போராட்டத்தில் இறங்கும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

### கிராமந்தோறும் ஆர்ப்பாட்டம்

"வர்க்கப் போராட்டத்திலும் சமூக கொடுமையையும் அடக்கு முறையையும் உறுதியாக எதிர்த்து நிற்பதில் தமிழக கிராமப் புறதொழிலாளி வர்க்கத்தில் முன்னணியில் இருப்பவர்கள் தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர்கள். அந்த பாரம்பரியத்திற்கு ஏற்றவகையில் சிம்சன் தொழிலாளர்களுக்கு ஆதரவாக தமிழகம் பூராவும் இருக்கும் தொழிலாளர்கள் ஈடுபடும்போது நாமும் நமக்கு உரித்தான பங்கை ஆற்றுவோம். அடக்குமுறையைத் தோல்வியுறச் செய்து சிம்சன் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கை வெற்றிபெற, மாவட்டம் பூராவும் உள்ள கிராம, வட்டார, தாலுக்கா விவசாயத் தொழிலாளர் சங்கங்கள் பூராவும் சிம்சன் தொழிலாளர்களின் போராட்டத்திற்கு தயாரிப்பு வேலைகளில் ஈடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன். இவ்வாறு தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## சென்னை சி. ஐ. டி. யூ சங்கங்கள் ஆதரவு

சென்னை, ஜன. 3— இந்திய தொழிற்சங்க மையத்தின் (சி. ஐ. டி. யூ.) சென்னை மாவட்ட சங்கங்களின் கூட்டம் டிச. 29-ல் நடைபெற்றது. 28 இணைக்கப்பட்ட சங்கங்களின் பிரநிநிதிகள் கலந்து கொண்ட அக்கூட்டத்தில் சிம்சன் போராட்டத்துக்கு ஆதரவளிக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

சென்னையிலும், அதன் சுற்றுபுறத்திலும் உள்ள எல்லா சங்கங்களும் ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்யத் தயாராகும்படி இக்கூட்டம் அறைகூவல் விடுத்துள்ளது.

சி. ஐ. டி. யூ. சென்னை மாவட்ட செயலாளர் தோழர் கே. எம் ஹரிபட் தலைமை வகித்தார். தோழர் வி. பி. சிந்தன் உரையாற்றினர்.

## மதுரை செல்லூரில் ஆதரவு ஊர்வலம்!

மதுரை, ஜன 3— செல்லூரில் சென்ற 27-ம் தேதி முதல் தங்களின் நியாயமான கோரிக்கைகளுக்காக வேலைநிறுத்தம் செய்துவரும் சிம்சன் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்து மதுரை செல்லூரில் ஜனவரி 1-ந் தேதி ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

மாலை 6 மணிக்கு செல்லூர் கைநெசவு தொழிலாளர் சங்கத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு செல்லூரில் முக்கியவீதிகள் வழியாக பொதுக்கூட்டம் நடைபெற்ற 60 அடி ரோட்டில் வந்துசேர்ந்தது.

சிம்சன் தொழிலாளர் போராட்டம் வாழ்க!

போராடும் தொழிலாளர்களுக்கெதிரான போலீஸ் அடக்குமுறை ஒழிக!

பங்களாதேஷ் வாழ்க! ஆகிய கோஷங்கள் எழுப்பினர்.

ஊர்வலம்முடிந்ததும் அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்துக்கு தோழர் ... ராம் தலைமை தாங்கினர்.

தோழர்கள் என். சங்கரய்யா, கே. அங்கமுத்து, கே. அய்யாவு, எம். குமாரசாமி ஆகியோர் பேசினர்.

கூட்டத்தின் இறுதிவரை ஆயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். சமீப காலங்களில் செல்லூரில் இவ்வளவு பெரிய கூட்டம் நடந்ததில்லையென்று மாற்றுக்கட்சியை சேர்ந்தவர்களும் பேசிக் கொள்ளுகின்றனர்.

கூட்டத்தின் இறுதியில், நமது புரட்சி தினத்தன்று நடைபெற்ற விளையாட்டுப் போட்டியில் வெற்றிபெற்ற தோழர்களுக்கு தோழர் என். சங்கரய்யா பரிசுகளை வழங்கினர்.

### தீர்மானங்கள்

கூட்டத்தின் இறுதியில் சமீபத்தில் வைகை வெள்ளப் பெருக்கால் உயிரிழந்த குடும்பங்களுக்கு அனுதாபம் தெரிவித்தும், வைகை ஆற்றின் இரு மருங்கிலும் தடுப்புச்சுவர் கட்ட வேண்டுமென்றும், செல்லூர் ஓடை இரு புறமும் சுவர் கட்ட வேண்டும் எனக் கோரியும், நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராடும் சிம்சன் தொழிலாளர்கள் மீது போலீசை ஏவிவிட்டு தடியடிப் பிரயோகம் செய்ததைக் கண்டித்தும், தொழிலாளர்களுக்கு விரோதமான ஒப்பந்தத்தை ரத்து செய்யவும், அவர்கள் விரும்பும் தலைவரை தேர்ந்தெடுக்கவும் வகை செய்யக்கோரியும், கைத்தறி உற்பத்தியாளர்களுக்கு நியாய விலையில் நூல கிடைக்க ஏற்பாடு செய்வதுடன், கை நெசவுத் தொழிலாளர்களுக்கு சட்ட பாதுகாப்பும் கிடைக்க தமிழக அரசு உடனே ஆவன செய்ய வேண்டுமெனவும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## மாணவர்கள் ஆதரவு

சென்னை, ஜன 3— சிம்சன் பிரச்சனையில், தங்களது ஜனநாயக உரிமைகளுக்காகப் போராடும், சிம்சன் தொழிலாளர்களுக்குத் தங்கள் பூரண ஆதரவை ஒத்துழைப்பும் தருவதாக பல மாணவர் சங்கங்களின் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

டிசம்பர் 29-ம் தேதி கூடிய இந்தக் கூட்டத்தில் இந்திய மாணவர் சங்கத்தின் சார்பில் டே. சந்துரு, மாணவர் காங்கிரஸ் சார்பில் திரு வி. தண்டாயுதபாணி, தமிழக மாணவர் மன்றத்தின் சார்பில் குன்றாமன், சோசலிஸ்ட் மாணவர் சங்கத்தின் சார்பில் தே. ஜகவீரபாண்டியன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### தாக்கப்பட்டவர் கைது

அமைச்சர்களின் வாக்குறுதிக்கு மதிப்பளித்து ஒருமுறையல்ல, இருமுறையல்ல-மூன்று முறை தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பியுள்ளனர். மும்முறையும் அவர்கள் தி.மு.க. தொழிற் சங்கத்தினரால், திட்டமிட்ட முறையில் ரௌடிகளைக்கொண்டு வேலைக்குச் சென்ற தொழிலாளர்களை தாக்கிய குண்டர்களைக் கைது செய்யாமல் — தாக்கப்பட்ட தொழிலாளர்களையே கைது செய்யுங்கொடுமை தி மு. க. ஆட்சியில்தான் நடைபெற்றுள்ளது. போலீசாரின் இப்போக்கை வன்மையாகக் கண்டிக்கிறோம்

தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்களின் நியாயமான ஜனநாயக போராட்டங்களை நசுக்க அரசு தன் அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்கிறது.

எங்கள் மாணவர் சங்கங்கள் முழு ஒற்றுமையுடன், தொழிலாளர்களைக் கலந்து ஆலோசிக்காமலேயே, அவர்களின் மீது வேலைப்பளுவைத் திணித்து, அதிகநேரம் வேலை பார்த்தால் ஓவர் டைம் கிடையாது. தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைத்து, வீட்டுக்குப் போகச்செய்யும் திட்டத்தை முணுமுணுக்காமல் ஏற்றுக்கொண்டு, அந்த திட்டத்தை நிர்வாகமும் தொழிலாளர்களைக் கசக்கிப்பிழியும் இந்த ஒப்பந்தத்தை அமுல்நடத்துவதை தான் நிலையை இவ்வளவு மோசமாக்கியது.

### போராட்டத்திற்கு ஆதரவு

அந்தக் கூட்டத்தில் தங்களின் நியாயமான கோரிக்கைகளுக்காக, உறுதியுடன் போராடிவரும் 15000 சிம்சன் தொழிலாளர்களின் நடத்தும் ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள், வேலை நிறுத்தப் போராட்டத்தில், கூட்டங்களில் கலந்துகொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

தொழிலாளர்களின் இந்த நியாயமான போராட்டத்தை ஆதரிக்காததால் அதனால் வரும் விளைவுகளுக்கு தி மு க. அரசாங்கமும், சிம்சன் நிர்வாகமும்தான் முழுப் பொறுப்பாளி.

தொழிலாளர்களின் ஆதரவு இல்லாமலேயே, தொழிற்சங்கத் தலைமை அட்டைபோல் ஒட்டிக்கொண்டிருக்கிறது என்பது நன்கு தெளிவாகியுள்ளது

## தாழையூத்து சிமிண்ட் கம்பெனி விபத்துக்கள்

தாழையூத்து, டிச. 1— தாழையூத்தில் இருக்கும் இந்தியா சிமிண்ட் நிர்வாகத்தில் இப்போது தொழிலாளர்களின் உயிர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு இல்லை. கடந்த வருடம் விபத்துக்கள் ஏற்பட்டுள்ளன.

இந்தியசிமிண்ட்ஸ் டிரான்ஸ்போர்ட் டிபார்ட்மெண்டில் நடராஜபிள்ளை பழுதடைந்த வண்டியினால் விபத்துக்குள்ளாகி இறந்தார்.

இதைப்போல் மேற்படி டிபார்ட்மெண்டில் மாரியப்பன் பிரேக் இல்லாத வண்டியை வலுக்கட்டாயமாக எடுக்கச் சொல்லி அதை ஓட்டியதால் இறந்தார்.

மேலும் இந்த மாத ஆரம்பத்தில் ஒரு காண்ட்ராக்ட் தொழிலாளி விபத்துக்குள்ளானார். அவருக்கு எந்தவித நஷ்டஈடும் தரவில்லை. காண்டிராக்ட் தொழிலாளர்களின் கதி இன்னும் மோசமாகவே உள்ளது.

இல்லன் டிபார்ட்மெண்டில் நாராயணன் என்ற தொழிலாளி கைவிளக்கு வைத்து வேலை செய்யும்போது மின்சாரம் தாக்கி இறந்துவிட்டார். இப்படி பல சம்வங்கள் நடந்துவருகின்றன. மேற்படி குடும்பங்களுக்கு இன்னும் நிர்வாகம் தகுந்த நஷ்டஈடு கொடுக்கவில்லை. —ந. நி.

## வருந்துகிறோம்

கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) கல்குளம் தாலுகா செயலாளர் தோழர் என். அச்சுதனின் தந்தை டி. நீலகண்டபிள்ளை டிசம்பர் 27-ம் நாள் காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## அமெரிக்க எதிர்ப்பு ஆர்ப்பாட்டம்!

சின்னமனூர், ஜன. 3— சின்னமனூரில் அமெரிக்க எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. முழுகடைஅடைப்பு செய்யப்பட்டது. மாலையில் சுமார் 500 பேர் கொண்ட ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தப்பட்டது.

இரவு பொதுக்கூட்டத்தில் முன்னாள் நாடாளு மன்ற உறுப்பினர் எம். மலைச்சாமி தலைமையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக தோழர் எஸ். துரைராஜும், மற்ற கட்சிப் பிரமுகர்களும் பேசினார்கள்.

தங்களின் ஜனநாயக உரிமைகளுக்காகப் போராடும் சிம்சன் தொழிலாளர்களுக்கு முழு ஆதரவையும் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களுக்கு ஆதரவாக எல்லா ஜனநாயக சக்திகளையும் திரட்டுவோம் என்று இந்த கூட்டறிக்கையின் மூலம் அறிவிக்கிறோம், என்று அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

## சின்னமனூரில் கருப்புப்பண வேட்டை தட்டி

சின்னமனூர், ஜன. 3— ஒரு அமைச்சர், நகரத்தந்தை, நாடாளுமன்ற உறுப்பினர் ஆகியோரிடம் ரூ. $1\frac{3}{4}$ கோடி கருப்புப்பணம் பிடிபட்டது பற்றிய விவரத்தைத் தெரிவிக்கும் தட்டிகள் சின்னமனூரில் வைக்கப்பட்டிருந்தன.

இதற்கு முன்னாள் தி மு. க, செயலாளர் ஒருவர் ஆட்சேபம் தெரிவித்து வாய்க்கு வந்தபடி பேசினார்.

இந்தத் தட்டிகள் வைக்கப் பட்டிருப்பதை எதிர்த்து டிச. 25—ம் தேதி தி.மு.க. வைச் சேர்ந்த ஒருவர் குடித்துவிட்டு கலாட்டா செய்தார்.

இது சம்பந்தமாக போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது

## வெண்மணி தியாகிகள் நினைவு நாள்!

தக்கலை. ஜன 3— தக்கலைக்கு அருகிலுள்ள சுங்கான் கடையில் வெண்மணி தியாகிகள் தினம் கொண்டாடப்பட்டது.

அதையொட்டி டிச 26-ம் நாள் நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு தோழர் எஸ். சிதம்பரதாணு தலைமை வகித்தார்.

தோழர் என் அச்சுதன், எ. பரமேஸ்வரன் (ஆளூர் பேரூராட்சி மன்றத்தலைவர்) ஆகியோர் பேசினர்

## பாவலரை விடுதலை செய்க!

செங்கோட்டை, ஜன. 3— தென்காசித் தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் எஸ். காளிமுத்து தலைமையில், 30—12—71-ல் குற்றாலத்தில் பொதுக்கூட்டம நடந்த போது, பாவலர் வரதராஜனை கைது செய்ததைக் கண்டித்தும்— அவரை உடனேவிடுதலை செய்யவேண்டுமென்றும் தீர்மானம்நிறைவேற்றப்பட்டது.

## சென்னையிலும் கருப்புப்பண வேட்டை விளம்பரத் தட்டிகள்

சென்னை, ஜன. 1— ஒரு மாநில அமைச்சர், நகரத் தந்தை நாடாளுமன்ற உறுப்பினர் ஆகியோரிடமிருந்து சுமார் $1\frac{3}{4}$ கோடி ரூபாய் கறுப்புப்பணம் மத்திய உளவு இலாகாவால் கைப்பற்றப்பட்டதாக மதுரையில் தட்டிகள் எழுதி வைக்கப்பட்டிருந்ததும் அதைப் போலீசார் எடுத்துச் சென்றதும் அறிந்ததே!

தற்போது அதே வாசகங்களைக் கொண்ட தட்டிகள் சென்னை நகரின் பல முக்கிய இடங்களில் கடந்த சில நாட்களாக வைக்கப்பட்டுள்ளன.

இத்தட்டிகளை ஏராளமானோர் திரளாக வந்து பார்க்கின்றனர்.

மதுரையில் போலீசார் தட்டிகளை அகற்றியதால் பெரும் பரபரப்புக்கும் தவறான யூகங்களுக்கும் இடமளித்ததால், அது போன்று இங்கும் ஏற்பட்டுவிடக்கூடாதே என்ற எண்ணத்தில்தான் இந்த பல இடங்களில் வைக்கப்பட்டுள்ள தட்டிகளை போலீசாரால் அகற்றப்படாமல் உள்ளன என்று கருதப்படுகிறது. — ந. நி.

## போர் நிறுத்தத்தைப் பயன்படுத்தி வடவியட்னும் துருப்புகள் மீது அமெரிக்கா திடீர் தாக்குதல்

சைகோன், ஜன. 2 — வியட்னாமில் புது வருடப் பிறப்பிற்காக நேற்று ஒருநாள் போர் நிறுத்தம் அனுஷ்டிக்கப்பட்டது. அந்த ஓய்வைப் பயன்படுத்திக்கொண்டு அமெரிக்க விமானங்கள் லாவோஸில் வடவியட்னும் துருப்புகள் மீது பெருந் தாக்குதல் நடத்தின.

பூதாகரமான "பி. 52 ஆகாயக் கோட்டை" விமானங்கள் 11 முறை அணிவகுத்துச் சென்று மொத்தம் 990 டன்னுக்கு சக்தி மிக்க வெடிகுண்டுகளை லாவோஸில் 'ஹோ-சி-மின் பாதை"யில் வீசின. சிறிய வகை அமெரிக்க குண்டுவீசி விமானங்கள் தாழ்வாகப்பறந்து வடவியட்னும் துருப்புகள் மீது குண்டு களைபொழிந்தன.

(வடவியட்னுமிலிருந்து மேற்கு—தென் மேற்காக, அடர்த்தியான லாவோஸ் காடுகளின் வழியே "ஹோ-சி-மின் பாதை" என்ற ராணுவ சப்ளை மார்க்கம் ஒன்றை பல ஆண்டுகளாக வடவியட்னும் பயன்படுத்தி வருகிறது. அதன் வழியாக கடந்த சில வாரங்களில் வட வியட்னும் புதிதாக பெருமளவு படைபலத்தை லாவோஸிற்கும், தென் வியட்னுமிற்கும் கொண்டு வருகிறது என்பது அமெரிக்காவின் புகார்.)

## காரகாஸ் - யு.எஸ் வர்த்தக ஒப்பந்தம் ரத்து

காரகாஸ்(வெனிசுலா), ஜன. 2— வெனிசுலாவுக்கும் அமெரிக்காவுக்குமிடையேயிருந்தவர்த்தக ஒப்பந்தத்தை வெனிசுலா ரத்துச் செய்துவிட்டது என்று அதன் ஜனதிபதி ரபேல்கால்டிரா அறிவித்தார்.

வெனிசுலா அபிவிருத்திக்காக மந்திரிசபை இந்தமுடிவு செய்தது. இந்தமுடிவு நேற்று வாஷிங்டனுக்கு தெரிவிக்கப்பட்டது.

## பல்லவா போக்குவரத்தும் பாழாகும் வரிப்பணமும்

சென்னை, ஜன. 3— பல்லவா போக்குவரத்து கழகத்தின் தொடக்க விழா இன்று சென்னையில் போக்குவரத்து அமைச்சர் திரு. ச, இராமச்சந்திரன் தலைமையில் நடைபெற்றது. முதலமைச்சர் மு. கருணாநிதி தலைமை வகித்தார்.

அரசு ஊழியர்களெல்லாம் சிக்கனமாக இருக்க வேண்டும்-அனைத்து மக்களும் சிக்கனமாக இருக்கவேண்டும்- அரசாங்கத்தில் காலியான வேலைகளுக்குப் புதியவர்களைப் போட்டு நிரப்பாமல், அந்த வேலைப் பளுவை அரசு ஊழியர்களே சுமக்கவேண்டும். அதுவே தேசபக்தி என்றெல்லாம் அரசாங்க உத்தரவுகளும், அமைச்சர்களின் உபதேசங்களும் பிறக்கின்ற இக்காலத்தில்-இந்த பல்லவா டிப்போ திறப்பதற்கு, இந்த மந்திரிகள் வருகிறார்கள் என்பதற்காக, எத்தனை ஆயிரம் டியூப் லைட்டுகளும் மெர்க்குரி லைட்டுகளும் போட்டுள்ளார்கள்!

நாட்டு மக்களுடைய வரிப் பணம் எப்படி தீபாவளியாகிறது பார்த்தீர்களா!

இது நியாயமா? இப்படி மக்களின் பணத்தை ஊதாரித்தனமாக விரைய மாக்கலாமா?— என்று கேட்டால், "நீ அதி தீவிரவாதி! நீ வெளி நாட்டான் கையாள்! நீ ஐந்தாம்படை!" —என்று அர்ச்சிக்கிறீர்களே, இது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

## ஆத்தூரில் நியாயவிலை கடைகள் கோரி ஆர்ப்பாட்டம்

ஆத்தூர். ஜன. 3— ஆத்தூரில் விலைவாசி உயர்வைக் கண்டித்தும், நியாவிலைக் கடைகள் திறக்கக் கோரியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆர்ப்பாட்டமும் ஊர்வலமும் நடத்தியது.

நூற்றுக்கணக்கான பேர்கள் கொண்ட ஊர்வலம் ஆத்தூர் உயர்நிலைப்பள்ளி முன்னால் இருந்து கிளம்பியது. ஊர்வலத்திற்கு ஆத்தூர் வட்ட விவசாயசங்கத் தலைவர் தோழர் ஆர், பி. இராமசாமி தலைமை தாங்கினர்.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துக! நியாயவிலைக் கடைகளை உடனேதிற! புதிய மின் கட்டணத்தை ரத்து செய்! வியட்நாம் மீது கை வைக்காதே! அமெரிக்கஏகாதிபத்தியம் ஒழிக! என்றுகோஷம் போட்டுக் கொண்டே, ஆத்தூரின் முக்கிய வீதிகளின் வழியே சென்று, தாலுகா ஆபீசை அடைந்தது.

### தாசில்தாருடன் பேச்சு

அங்கு தாசில்தாரை தோழர்கள் பி. ராஜு, ஆர். பி ராமசாமி ஆகியோர் சந்தித்து பேசினர். ஆத்தூர்பகுதியில் விலைவாசி எக்கச்சக்கமாக விற்பதால், விவசாயிகள் கம்பு, சோளம் போன்ற தானியங்களைக்கூட வாங்க முடியாமல் அவதிப்படுகின்றனர்.

எனவே நியாயவிலைக் கடையை உடனே திறக்க வேண்டும் ,என்று வலியுறுத்தினர்.

பின் பெட்ரோல் பங்கு அருகில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர் ஆர். பி. ராமசாமி, பி. ராஜு ஆகியோர் பேசினர். நியாயவிலைக்கடை திறக்கும் வரை போராடுவோம். அதற்கு கட்சி வித்யாசம் பாராமல் அனைவரும் ஆதரவு தருமாறு தோழர் பி. ராஜு கேட்டுக் கொண்டார்.

## வீடு புகுந்து போலீஸ் வேட்டை

சென்னை, ஜன 3— போராடும் சிம்சன் தொழிலாளர்களை வீடுதேடிச்சென்று போலீஸ் கைது செய்யும் படலம் துவங்கியுள்ளது. தொழிலாளர்கள் வீட்டில் இல்லையென்றால் அவர்களது பெற்றோர்களையும் குடும்பத்தினரையும் கைது செய்து வருகின்றனர்.

டி. பி இரத்த அழுத்தமும் உள்ள ஒரு தொழிலாளியின் தந்தை இரவு 2 மணிக்கு கைது செய்யப்பட்டார்.

மற்றொரு தொழிலாளியினுடைய சகோதரன் (14 வயது) கைது செய்யப்பட்டார்.

சில இடங்களில் பெண்களையும் போலீஸ் லாரியில் ஏற்றிச் சென்றனர்.

## மேற்கு வங்க கைதிகள் கடலூர் கொண்டுவரப்பட்டனர்

திருச்சி, ஜன. 2 — மேற்கு வங்கத்தில் பல்வேறு சிறைகளிலும் காவலில் வைக்கப்பட்டிருந்த சுமார் 600 கைதிகள் பலத்த போலீஸ் பந்தோபஸ்துடன் ஹௌராவிலிருந்து விசேஷ ரயிலில் இன்று பகலில் திருச்சி கொண்டுவரப்பட்டு கடலூருக்கு அனுப்பப்பட்டுள்ளனர்.

ஜங்ஷனில் விசேஷ ரயில் அருகில் எவரும் செல்லமுடியாதபடி பலத்த போலீஸ் பந்தோபஸ்து போடப்பட்டிருந்தது.

கைதிகள் அனைவரும் இங்கிருந்து விசேஷ ரயிலில் கடலூருக்கு அனுப்பப்பட்டனர்

## தஞ்சை கள் இறங்கும் தொழிலாளர் சங்கம்

வள்ளுர் ஜன 1— தஞ்சைமாவட்ட "கள்இறக்கும் தொழிலாளர்சங்கத்தின்" வள்ளுவர் கிளை அமைப்பு கூட்டம் தோழர் பி வெங்கடேசன் தலைமையில் நடைபெற்றது.

கிளை உறுப்பினர்களாக கீழ்காணும் தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ரா. வைரக்கண்ணு தலைவர், கூ. சிவசாமி உபதலைவர், சி. ப. சௌந்திர பாண்டியன் செயலாளர், சி. கா. வடிவேல் உபசெயலாளர், குருசாமி பொருளாளர், செ. பிச்சை, க, வைத்திலிங்கம், நா. சுப்பிரமணியன், சு. மாரிமுத்து, மரி. வேம்பையன், வீ. சாமியப்பன், சேவவபன், வீ. ஆறுமுகம்.

கூட்டத்தில் தஞ்சை மாவட்ட கள் இறக்கும் தொழிலாளர்கள் சங்கத் தலைவர் தோழர் சி. காசிநாதன், மன்னை தாலுகா கள் இறக்கும் தொழிலாளர் சங்கத் தலைவர் எ. சபாபதி, தாலுகாசெயலாளர் தோழர் எம். பக்கிரிசாமி ஆகியவர்கள் கலந்து கொண்டு விளக்க உரையாற்றினர்கள்.

## மன்னர்குடியில் மாதர் சங்க அமைப்பு

மன்னார்குடி, ஜன. 1— டிசம்பர் மாதம் 31ந்தேதி மன்னார்குடியில் மன்னை தாலுகா மாதர் சங்கம் அமைப்புக்கூட்டம் தோழியர் டி லீமாரோஸ் தலைமையில் நடைபெற்றது.

தோழியர் பி. வி. ராஜம், தலைவராகவும், கே. பார்வதி செயலாளராகவும் சேப்பம்மாள் உதவிதலைவராகவும், டி. லீமாரோஸ் உதவி செயலாளராகவும், யு. தேனம்மாள் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பி. அன்னபட்டு, பி. பேபி கலோசனபட்டு, வி. குப்பம்மாள் ஆகியோர் நிர்வாகக்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்தில் தஞ்சை மாவட்ட வி. ச தலைவர் தோழர் ஏ. நடராசன் மாதர் சங்க இயக்கத்தைப் பற்றி விளக்க உரையாற்றினர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# கண்ணோட்டம்

## வரலாறு படைக்கும் சிம்சன் தொழிலாளருக்கு புகழாரம் சூட்டுவோம், வாரீர்!

சென்னை சிம்சன் தொழிலாளர் மீது தடியடி விழுந்து விட்டது... சிம்சன் தொழிலாளர் மீது கண்ணீர்ப் புகைக் குண்டு வீசப்பட்டது... சிம்சன் தொழிலாளர்கள் சிறைச்சாலையில் அடைக்கப்படுகிறார்கள்... சிம்சன் தொழிலாளர்களின் குடும்பத்தினர் கடத்தப்படுகிறார்கள்... சிம்சன் தொழிலாளர்களுக்குக் கத்திக் குத்து... சைக்கிள் செயின் அடியும் கிடைத்திருக்கிறது... சிம்சன் தொழிலாளர் கோரிக்கைகள் நிராகரிக்கப்படுகின்றன... சிம்சன் தொழிலாளர்களைப் பட்டினி போட்டுப் பணிய வைக்க வேண்டும் சிம்சன் தொழிலாளர் போராட்டத்தை அடித்தே நசுக்கி விடவேண்டும் என்று அமைச்சர்கள் உறுதி கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் இந்தப் போராட்டத்தை யார் யாரெல்லாம் ஆதரிக்கிறார்கள் தெரியுமா?

சிம்சன் தொழிலாளர் போராட்டத்தை சி. ஐ. டி. யூ ஆதரிக்கிறது... குசேலர் தலைமையில் உள்ள சென்னை—செங்கல்பட்டு தொழிற் சங்கக் கவுன்சில் ஆதரிக்கிறது. ஏ. ஐ. டி. யூ. சி. ஆதரிக்கிறது... ஐ. என். டி. யூ. சி. ஆதரிக்கிறது... எச். எம். எஸ். ஆதரிக்கிறது... எந்த மத்திய தொழிற்சங்கங்களிலும் இணைக்கப்படாமலிருக்கும் எத்தனையோ தொழிற்சங்கங்கள் ஆதரிக்கின்றன.

குறிப்பாக, சென்னை—செங்கல்பட்டு தொழிற்சங்க கவுன்சிலில் இணைந்துள்ள எத்தனையோ ஆயிரம் தி. மு. க. தொழிலாளர்கள். இதர தொழிலாளர்களுடன் இணைந்து நின்று தமது ஆதரவைத் தெரிவித்திருக்கின்றனர்.

தமிழக விவசாயிகள் இயக்கமும், சர்வகட்சி மாணவர் சங்கங்களும் ஆதரிக்கின்றன.

சிம்சன் தொழிலாளர் போராட்டத்தை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கிறது... வலது கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கிறது... ஸ்தாபன காங்கிரஸ் ஆதரிக்கிறது... ஜனசங்கம் ஆதரிக்கிறது... சுதந்திரா கட்சி ஆதரிக்கிறது... சோஷலிஸ்ட் கட்சி ஆதரிக்கிறது...

இது மட்டுமா? தி. மு. க. கூட்டணியில் சேர்ந்திருக்கும், இந்திரா காங்கிரஸ் கட்சியும் சேர்ந்திருக்கிறது... அக்கட்சியின் நாடாளுமன்றஉறுப்பினர் இரா. கிருஷ்ணன், காமராசர், சிக்கவர்கள் ஆகியோரும் ஆதரவு பெற்று அண்ணாவின் அருகில் உண்ணாவிரதம் இருக்கப்போய் கைதாகியுள்ளனர்.

ஆளும் காங்கிரசின் தமிழ்நாடு கமிட்டி செயலாளர் சட்டநாதக் கரையாளர் விடுத்த அறிக்கையில், "80 சதவிகித தொழிலாளர்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டது தி. மு. க. தலைமை" யென்று கூறி, அரசின் அடக்கு முறையையும் தொழிலாளி விரோதப்போக்கையும் கண்டித்தார்.

ஆளுங் காங்கிரசின் மத்திய உருக்கு அமைச்சர் மோகன்குமாரமங்கலம், காட்டூர் கோபாலின் ஒப்பந்தத்தையும், ஜனநாயக விரோதப் போக்கையும் கண்டித்துப் பகிரங்கமாகவே பேசியுள்ளார்......

ஆளுங் காங்கிரசின் மத்திய திட்ட அமைச்சர் சி. சுப்ரமண்யம் "முற்போக்குக் கூட்டணிக் கட்சியில் இருக்கும் தோழமைக் கட்சிகள் வாய்மூடி எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?" என்று படக்கென்று கேட்டு விட்டார்......

மற்றொரு ஆளுங் காங்கிரஸ் தலைவரும் முன்னாள் முதலமைச்சருமான எம். பக்தவத்சலம், பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில், "தூய்மை இல்லாத தோழமைக்கட்சிகள் உறவு பற்றி மறு பரிசீலனை செய்ய வேண்டுமென்று மு. கருணாநிதி அறிவித்துள்ளார். அவரது இந்த அறிக்கை காங்கிரஸை அவமானப்படுத்துவது போலாகும் நாங்கள் தி. மு. க. வுக்கு என்ன அடிமைச்சீட்டா எழுதி கொடுத்திருக்கிறோம். ஆண்டான் அடிமைகாலம் மலையேறி விட்டது சிம்சன் விவகாரத்தில் நீ பேசவே கூடாது, பேசவே வாய் இல்லை. வாயை மூடிக்கொண்டு இரு என்று மிரட்டி எச்சரிப்பது எப்படி சரியாகும்? தி. மு. க. வுக்கும் காங்கிரசுக்கும் கூட்டணி ஏதுமில்லை; தி. மு. க. சொல்லுவதை கேட்க வேண்டிய தேவையுமில்லை"— என்று பச்சையாகக் கூறிவிட்டார்.

கூட்டணியில் இருந்த ஆளுங் காங்கிரஸ் மட்டுமல்ல, வலது கம்யூனிஸ்ட் கட்சியும் சிம்சன் தொழிலாளர் போராட்டத்தை ஆதரிக்கிறது. வலது கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாணசுந்தரத்தை "இரட்டை வேடதாரி" என முதலமைச்சர் கருணாநிதி குற்றம் சாட்ட, "அந்த இரட்டைவேடக் கலையில் உம்மை மிஞ்சுவார் யாருமில்லை" என்று கல்யாணசுந்தரம் பதிலடி கொடுக்க... இந்த அளவுக்கு முரண்பாடுகள் முற்றியிருப்பதையும் பார்க்கிறோம்.

மற்றும் தி. மு. க. வின் 7 கட்சிக் கூட்டணியில், இன்னும் வாய்திறக்காத கட்சிகளின் தலைவர்களை வாய் திறக்க வைத்தால், அவர்களும் சிம்சன் தொழிலாளர்களைத் தான் ஆதரித்துப் பேச நேரிடும் என்பதில் ஐயமில்லை

இந்த அளவுக்கு சிம்சன் முதலாளியையும், அந்த முதலாளிக்கு ஆள்காட்டியாக விளங்கும் காட்டூர் கோபாலையும், இந்த இரண்டு பேருக்கும் குண்டர்படைப் பாதுகாப்பு அளிக்கும் தி. மு. க. அரசின் முரட்டுத்தனமான, கண்மூடித்தனமான, துரோகத்தனமான கேவலமான, ஜனநாயக விரோதமான நடைமுறையையும் எதிர்த்து நிற்கவும்... அனைத்துக் கட்சிகளும்... அனைத்து தொழிற் சங்கங்களும்... அனைத்து பொதுஜன ஸ்தாபனங்களையும்... ஏன், மத்திய அரசுக்கூட தயவுமோடு ஒரு பொதுவான ஒற்றுமை அணியில் கொண்டு வந்து நிறுத்தியதும்... சிம்சன் தொழிலாளர் வீரர்களால் எப்படி முடிந்தது?

அவர்களது நியாயமான கோரிக்கை!... உடைக்க முடியாத ஒற்றுமை!... வீரஞ் செறிந்த போராட்டம்!... இணையற்ற தியாகம்!... வர்க்கப் பாதையை உணர்ந்த வெளிச்சம்!

தமிழ்நாட்டுத் தொழிலாளி வர்க்கத்துக்கே பெருமை தேடித் தந்தவர்கள் சிம்சன் தொழிலாளர்கள் என்றால், அது முழுக்க முழுக்க உண்மை அதனால்தான், சி. ஐ. டி. யூ. வின் பொதுச் செயலாளர் பி. ராமமூர்த்தியும், தமிழகத் தலைவர் கே. ரமணியும், செயலாளர் தோழர் உமாநாத்தும், "1946-ம் ஆண்டில் நடைபெற்ற ரயில்வே தொழிலாளர்களின் போராட்டத்திற்குப் பிறகு, தமிழக வரலாற்றில் தனிச்சிறப்பைப் பெற்றுத் திகழ்வது சிம்சன் தொழிலாளர் போராட்டம்" என்று பெருமையோடு கூறினர்.

சிம்சன் குரூப் தொழிலாளர்களின் மகத்தான போராட்டத்தின் விளைவாக, சென்னை செங்கல்பட்டு மாவட்டங்களிலும், தமிழகம் முழுவதுமே எழுந்து குமுறும் ஆதரவு இயக்க கிளர்ச்சிகளையும், அனைத்துக் கட்சிகளின் ஆதரவையும் கண்டு தி. மு. க. முரசொலிக்கு பைத்தியம் பிடித்து விட்டது.

அந்தக் கிறுக்கில் பேதிதல் ஆரம்பித்து விட்டது. அதனால் தான், "சீனநாட்டிற்குக் கங்காணியாக இருந்து கொண்டே தொழில் அமைதி கொடுக்கும் ஆமைகள்"—என்றும், இரட்டை வேடம் போடும் சிவப்பாவடைக் கும்பகர்ணர்கள் என்றும்-மாஜிகளின் கும்பல்—இன்னும் என்னென்னமோ, "இராகு, கேது, கேட்டை, மூட்டை செய்வாய்க் கிழமை"—என்று, சிம்சன் குரூப் தொழிலாளர்களை ஆதரிக்கும் கட்சிகளை அர்ச்சிக்கத் தொடங்கி விட்டது.

பகைக் கூடாரத்தின் மீதும், பக்கத்துக் கூடாரத்தின் மீதும் தி. மு. க. தோழர்கள் பார்வையைச் செலுத்திட வேண்டுமென்று கூறுகிறது.

தெருவுக்குத் தெரு, திண்ணைக்குத் திண்ணை சிம்சன் தொழிலாளர் போராட்டத்தை ஆதரிப்பவர்களை எதிர்த்துப் பிரச்சாரம் செய்ய தி. மு. க. தோழர்களுக்கு அறைகூவல் விட்டுள்ளது முரசொலிப் பெட்டி.

ஆனால், காட்டூர் கோபாலின் துரோகத்தையும், முதலாளிக்கு ஆதரவாக நிற்கும் ஆட்சியின் போக்கையும் நன்கு அறிந்து கொண்ட, தி. மு. கழகச் சார்புள்ள ஆயிரமாயிரம் தொழிலாளர்களும், பொதுமக்களும் சிம்சன் தொழிலாளர் பக்கமே இருக்கிறார்கள் என்பதை எத்தனையோ தொழிற்சங்க ஆர்ப்பாட்டங்கள் மூலம் நிருபித்து விட்டார்கள்.

அவ்வளவு தூரம் போவானேன்! காட்டூர் கோபாலுக்கு முட்டுக் கொடுத்துக் கொண்டிருக்கும் ஒரு சில கருங்காலிகளைத் தவிர— சிம்சன் குரூப்பில வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் 15,000 தொழிலாளர்களில் கணிசமாக உள்ள தி. மு. க. தொழிலாளர்களும், அனைவருடனும் சேர்ந்து நின்று ஆயிரம் வழிகளில் நிரூபித்துவிட்டார்கள்.

முதலமைச்சரின் அடக்குமுறையும் பலிக்காது. முதலாளியின் ஜன்னிக் கூச்சலும் பலிக்காது. சிம்சன் தொழிலாளர் வெற்றியை யாராலும் தடுக்கவும் முடியாது!

—ஐ. மா. பா

## டிராக்டர்களைப் புகுத்தி வேலையில்லாமற் செய்த பின்

# சட்டங்களால் பயன் என்ன

(2-ஆம் பக்கத் தொடர்ச்சி)

டில் வாரம் கொடுப்பதில்லை. அதற்குப் பதிலாக நீதிபதிகள் அளிக்கும் தீர்ப்பை வைத்து குத்தகை நிர்ணயிக்கப் படுகிறது. இதற்கு சாட்சியங்களை ஆதாரங் காட்டுவதும் தயாரித்து அளிக்கக் கூடிய சாட்சியங்களும் தான் காரணம்.

இப்படி அளிக்கப்படும் தீர்ப்பு, கிராமங்களில் விளைவதை அடிப்படையாகக் கொண்டதாகவோ ரெவின்யூ அதிகாரிகள் மசூல் கணக்கை அடிப்படையாக கொண்டதாகவோ இருப்பதில்லை இதன் காரணமாக சக்திக்கு மீறிய குத்தகை அளக்க வேண்டியிருப்பதாலும் இயற்கை பாதிப்பாலும் கடன் தொல்லையாலும் ரெவின்யூ கோர்ட்டு மூலம் ஏராளமான விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். தொடர்ந்து வெளியேற்றப்படுகிறார்கள்.

### நிலவெளியேற்ற சட்டம்

குத்தகைதார் பாதுகாப்புச் சட்டம், நிலவெளியேற்றசட்டமாகவும் நிலப்பிரபுத்துவ சுரண்டல் சட்டமாகவும் அமைந்து விட்டது. சட்டப்படி ஏராளமான விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டார்கள் இதன் விளைவு என்ன? கிராமப்புற பாட்டாளிகள் எண்ணிக்கை உயர்த்தப்பட்டது. கிராமங்களில் இருந்த குறைந்த பட்ச வேலையையும் பங்குபோட்டுக்கொள்ளும் பங்காளியாக ஆனார்கள்.

### பண்ணையாள் ஒழிப்புச் சட்டம்

தஞ்சை மாவட்டத்தில் பண்ணை வேலை செய்யும் தொழிலாளர்களுக்கென்று, பண்ணையாள் பாதுகாப்புச்சட்டம் வந்தது. அந்த சட்டப்படி கூலி கேட்ட விவசாய தொழிலாளர்கள் வெளியேற்றப் பட்டார்கள். கூலி கேட்டால் வேலை இல்லை. உரிமை பறிபோகும் என்ற நிலை வளர்ந்து, இன்று பண்ணையார்களே தேவை இல்லை என்ற நிலை உருவாகி, பண்ணையார் பாதுகாப்பு சட்டம் மறைந்து பண்ணையார் ஒழிப்புச் சட்டமாக முடிந்தது சுதந்திரத் தொழிலாளர்களாக இவர்கள் மாறினார்கள். வேலையற்றவர்கள் எண்ணிக்கை மேலும் உயர்ந்தது.

### உச்சவரம்புச் சட்டத்தால் உழவனுக்கு நிலமில்லை

கிராமங்களில் நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு நிலம் வழங்குவோம் என்றும் நிலக் குவியலைத் தடுப்போம் என்றும் வாய்வீரம் பேசிய காங்கிரஸ் அரசும், தி. மு. க. அரசும் கொண்டு வந்த உச்சவரம்புச் சட்டங்களால் உழவனுக்கு நிலம் கிடைக்கவில்லை. பெரும் நிலப்பிரபுக்களை ஏகபோக வாதிகளாக மாற்றி கிராமப்புற மக்களை இரக்கமற்ற முறையில் சுரண்டுவதற்கு சட்டரீதியாகப் பாதுகாப்பளிக்கப்பட்டு விட்டது.

முற்போக்கான சட்டம் என்று கூறி கிராமப்புற ஏழை மக்கள் பகிரங்கமாக வஞ்சிக்கப் பட்டார்கள். பட்டா மாற்றம் செய்து நிலக்குவியலைப் பாதுகாத்துக் கொண்டார்கள். சட்டத்தின் மோசடியால் நிலப்பிரபுத்துவச் சுரண்டல் முறை தலைவிரித்தாடுகிறது.

### விவசாயத் தொழிலாளர்கள் கூலிசட்டத்தின் லட்சணம்

விவசாய தொழிலாளர்களுக்கென்று கூலிச் சட்டம் வந்திருந்தாலும், அந்தசட்டம் கீழத்தஞ்சைக்கு மட்டும்தான், மற்ற பகுதிகளில் உள்ள விவசாயத் தொழிலாளர்கள், இந்தச் சட்டத்தின் பலனைப் பற்றி நினைத்துப் பார்க்க கூட முடியாது. சட்டம் அமுலில் உள்ள இடங்களிலாவது கூலியும் வேலையும் கிடைக்கிறதா வென்றால் இல்லை. சட்டப்படி கூலி கேட்டால் வேலை இல்லை என்று கூறிவிடுவார்கள். வெளியாட்கள் வந்து வேலை செய்வார்கள். சட்டக் கூலி கேட்ட தொழிலாளர்கள் பட்டினி கிடக்க வேண்டும். அல்லது குறைந்த கூலி வாங்கி கொள்ள வேண்டும். இதை அதிகாரிகளுக்கு எடுத்துச் சொன்னால் அவர்கள் தொழிலாளர்களிடம், "நீங்கள் அதிக கூலி கிடைக்கும் இடங்களுக்கு வேலைக்குப்போங்கள்" என்று உபதேசம் செய்வதைத் தான் பார்க்கிறோம்.

### பொய் வழக்குகள்

காங்கிரஸ் ஆட்சிக் காலத்திலும் சரி, தி. மு. க. ஆட்சிக் காலத்திலும் சரி, நிலப்பிரபுக்கள் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். இதனால் அதிகாரிகளும் போலீசும் அவர்கள் ஆணைக்கு கட்டுப்பட்டவர்கள்தான். சட்டப்படி கூலி கேட்பவர்கள் மீது பொய்வழக்கு போடுவார்கள். அந்தப் பகுதியிலேயே வேலை கொடுக்கக்கூடாது என்று மிராசுதார்கள் ஒன்று சேர்ந்து நிர்ப்பந்திப்பார்கள். ஒன்று, குறைந்த கூலி வாங்கிக் கொள்ள வேண்டும், அல்லது வேலையின்றி பட்டினி கிடக்க வேண்டும். சட்டப் பாதுகாப்பு என்பதெல்லாம் தொழிலாளர்களுக்கு அல்ல! நிலப்பிரபுக்களுக்குதான்!

### சுருக்கமாக

உச்சவரம்புச் சட்டங்களின் மூலம் நிலக்குவியல் தடுக்கப் படவில்லை. ஏழை உழவர்களுக்கு நிலம் வழங்கப்படவில்லை. சிறு நிலக்காரர்கள் தங்களிடமுள்ள துண்டு துக்காணி நிலங்களையும் இழந்துக் கொண்டிருக்கிறார்கள்- குத்தகை சாகுபடிதார்களிடம் உள்ள நிலங்கள் சட்டப்பூர்வமாக பறிமுதல் செய்யப்படுகிறது. பண்ணையாட்கள் சட்டப்பூர்வமாகஒழிக்கப்பட்டார்கள் சட்டக்கூலி கேட்டதால் விவசாய தொழிலாளர்களுக்கு வேலை இல்லை.

மேறகண்டவைகளால் கிராமப்புற மக்களின் துன்ப துயரங்கள் மலைபோல் குவிந்து விட்டன. மழைமுகம் காணாப் பயிர்களைபோல், வேலையற்றவர்கள் வாழ்க்கை, சருகு போல் உலர்ந்து கொண்டே இருக்கிறது. கிராமப்புறச் சுரண்டல பெருச்சாளிகள் ஏகபோக வாதிகளாக வளர்ந்து கொண்டே இருக்கிறார்கள்.

### தீர்வு என்ன?

வேலையற்ற வாலிபர்களும் கிராமப்புற மக்களும் சிந்திக்க வேண்டிய காலம் வந்து விட்டது. நாடு சுதந்திரம் அடைந்து 25 ஆண்டு காலமாகியும் - சட்டங்கள் பல இயற்றியும், திட்டங்கள் பல தீட்டியும், வேலை இன்மை போகவில்லை. பட்டினி தீரவில்லை. ஏழைகளின் வாழ்க்கையில் எவ்வித மாற்றமுமில்லை. ஆட்சியில் இருக்கின்ற நபர்கள் மாறுவதன் மூலமோ அல்லது கட்சி மாறுவதன் மூலமோ இவைகள் தீர்க்கப்படுவதில்லை. சுரண்டும் சமுதாய அமைப்பு மாற வேண்டும்.

### சிந்திப்பீர்

25-ஆண்டுகாலமாக வேலை இன்மையைப் போக்கவும் பட்டினியைத் தீர்க்கவும், சமூதாய மாறறத்தை ஏற்படுத்தவும் முடியவில்லை. அதற்கு பதிலாக புதிய புதிய வாக்குறுதிகள் தான் அள்ளி வீசப்படுகின்றன!

தொழிலாளர்களை ஒன்றுபடாமல் சுரண்டும் வர்க்கம் ஜாதி, மதம் பணபலம் இவைகளை காட்டி பிரித்து வைத்து தங்களுடைய கொள்ளை லாபத்தையும் சுரண்டலையும் பாதுகாத்துக் கொள்கிறார்கள்.

அரசாங்க அதிகாரம் சுரண்டும் கூட்டத்தின் கையில் இருக்கும் வரையில் பெறும் பொருளாதார போராட்டங்கள் மட்டுமோ சம்பள உயர்வுகள் கிடைப்பதன் மூலமோ கூலி உயர்வுகள் கிடைப்பதன்மூலம் மட்டுமோ இதை தீர்க்க முடியாது

அரசியல் அதிகாரம் பாட்டாளி வாக்கத்தின் கைக்கு மாறவேண்டும். அதிகார மாற்றம் ஏற்பட்டால் மாத்திரமே சுரண்டும் கூட்டத்தை ஒழித்து சோஷலிச சமுதாயத்தை நோக்கி முன்னேறவும் உழுபவனுக்கு நிலம் கிடைக்கவும், வேலை இன்மையைப் போக்கவும், பட்டினியை தீர்க்கவும் முடியும்.

# மதுரை கைநெசவாளர் போராட்டம்!

மதுரை, ஜன. 3—

மதுரை கைத்தறி நெசவாளர்களின் காலவரையற்ற உண்ணாவிரதப் போராட்டம் இன்று முதல் ஆரம்பமாகியது.

மாஸ்டர் வீவர்கள் 12—10—71ம் தேதி மாவட்ட கலெக்டர் முன் செய்த ஒப்பந்தத்தை மீறி கூலி குறைப்பு செய்வதால் கைநெசவுத் தொழிலாளர்கள் போராட்டத்தல் இறங்கியுள்ளனர்.

போராட்டத்தின் முதல்கட்டமாக இன்று முதல் உண்ணாவிரதப் போராட்டம் ஆரம்பமாகியது.

ஐக்கியக்குழு உபதலைவர்கள் ஏ. ஆர் ராமலிங்கம், ஏ. என் முத்துராம், உதவி காரியதரிசி ஜெ. எஸ். இராஜாராம். செயற்குழு உறுப்பினர் கிருஷ்ணமாச்சாரி ஆகிய நால்வரும் உண்ணாவிரதம் இருக்கிறார்கள்.

உண்ணாவிரதத்தை துவக்கி வைத்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சி சாரபில் தோழர் வி. கார்மேகம், ஸ்தாபன காங்கிரஸ் சாரபில் ப. நெடுமாறன், ஜெ. கே. ராமமூர்த்தி. டி. என். நரசிம்மராவ், கே. வாசுதேவன், எம் அய்யாச்சாமி, எம். எல். சி. வி. பாலகிருஷ்ணன் மற்றும் பலர் பேசினா. ஐக்கியக் குழுத் தலைவர் எம். இராஜகோபால் உண்ணாவிரதம் இருப்பவர்களை வாழ்த்திப் பேசினார்.

மாஸ்டர் வீவர்கள். நெசவாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்காவிட்டால், தொடர்ந்து போராடுவதாக முடிவு செய்யப்பட்டது

அந்தக் கூட்டத்தில், விரைவில் தமிழக அரசு தலையிட்டு ஒரு சுமுகமான சூழ்நிலையை உருவாக்க வேண்டும் என்று வற்புறுத்தியது.

# மதுரை இந்திரா காங்கிரசுக்குள் குத்து வெட்டு!

மதுரை. ஜன 3—

மதுரை அர்பன் ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ஆர். எம். வீரபத்திரத் தேவர் நகர் காரியதரிசிகளை நீக்கிவிட்டதாகவும், புதிதாக, இரண்டு நபர்களை தன்னிச்சையாக நியமித்திருப்பதாகவும் அறிவித்திருப்பது இந்திரா காங்கிரஸ் கட்சியின் ஊழியர்களிடையே பெரிய பரபரப்பை ஏற்படுத்தி இருக்கிறது.

இது பற்றி அக்கட்சியின் முக்கிய பிரமுகர் ஒருவர்கூறியதாவது:—

திரு மாணிக்கம் திரு தங்கமணியை கட்சியின் காரியதரிசிகளாக நியமித்திருப்பதாக பத்திரிகைகளில் வெளிவந்த செய்தியைப் பார்த்ததும் மிகவும் ஆச்சரியப்பட்டேன். கமிட்டியில் எந்தவிதமான மாற்றமோ நபர்களை நீக்குவதோ, சேர்ப்பதோ, தலைவருக்கு எந்தவிதமான அதிகாரமும் கிடையாதென்றும் இதன் மூலம் தமிழ்நாட்டுத் தலைமைக்கு எதிராக, ஒரு பூசலை உண்டாக்குவதாகத் தெரிகிறது என்றும் கூறினர். மேலிடத்து முடிவுகளை உதாசினப்படுத்தியதால், இவர் கட்சியில் இருந்து நீக்கப்படலாமென்றும், அப்படி நிகழ்ந்தால் அது ஆச்சரியப்படுவதற்கில்லை. என்றும் கூறினர்.

(ந. நி.)

# தமிழ்நாடு விவசாயிகள் சங்க அறிவிப்பு

## (எல்லா விவசாயிகள் சங்கங்களுக்கும், வட்ட, மாவட்டக் கமிட்டிகளுக்கும்)

தோழர்களே!

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்திற்கு 1971-ஆம் வருட அங்கத்தினர் சேர்ப்பு இயக்கம் 1972 மார்ச்சு 31-ந் தேதிவரை இருக்கிறது. ஆகவே, ஆங்காங்குள்ள விவசாயிகள் சங்கக் கிளைகளும், கமிட்டிகளும் கூடி விவாதித்து, விவசாயிகள் சங்கத்திற்கான, விவசாயத் தொழிலாளர்கள் சங்கத்திற்கான உறுப்பினர் சேர்ப்பு இயக்கத்தைத் தீவிரப்படுத்த வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

தோழமையுள்ள,

**ஆர். ராமராஜ்,**

பொதுச் செயலாளர்.

# போராடு, தோழா, போராடு!

## கோவை- ஆர். ஏ. கோவிந்தராஜன்

(திருடாதே பாப்பா திருடாதே மெட்டு)

போராடு தோழா போராடு
தடையை நொறுக்கத் தயங்கி விடாதே
கொடுமை நிலைக்குப் பணிந்து விடாதே ... போராடு

சென்னை நகரில் சிம்சன் குரூப்பில்
வன் முறைக் கலகம் நடக்குது — ஒரு
ரவுடிக் கும்பல் இருக்குது
தெரிஞ்சும் தெரியாமெ நடப்பதில்லை — அதை
தி. மு. க. பேரவை நடத்துது ... போராடு

சட்டம் போட்டு மு. க. ஆட்சி
போராட்டத்தையே அடக்குது — அந்த
வெட்கங் கெட்ட கோபால் செய்த
ஒப்பந்தத்தையே திணிக்குது
உறுதியாய்ச் சேர்ந்து எதிர்த்தோமென்றால்
உருட்டலும் மிரட்டலும் நடக்காது ... போராடு

அடிக்கிற காரியம் தொழிலாய்க்கொண்டால்
உழைக்கிற வர்க்கம் பொறுக்காது
உழைப்பவரெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்தால்
கெடுக்கிற ஒப்பந்தம் இருக்காது
சைக்கிள் செயினும் ஜெயிக்காது
பறித்திட்ட உரிமையைக் கொடுக்காவிட்டால்
கலைஞரின் பாச்சா பலிக்காது
இனி கோபாலின் ஆட்டமும் நிலைக்காது....போராடு

# பங்களாதேஷ் வெற்றி விழா

பல்லடம், ஜன. 3—

பல்லடத்தில், பங்களாதேச வெற்றிவிழா கொண்டாடப் பட்டது.

காரல் மார்க்ஸ் மன்றத்திலிருந்து ஒரு சைக்கிள் ஊர்வலம் சென்றது. சைக்கிள் ஊர்வலத்திற்கு தோழர் வி. எம். இஸ்மாயில் தலைமை வகித்தார்.

ஊர்வலம் நகரின் பல முக்கிய பகுதிகளின் வழியாகச் சென்று, இறுதியில் மணிக்கூண்டு திடலை அடைந்தது.

அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு தோழர் வி.எம். இஸ்மாயில் தலைமை வகித்தார். தோழர் கே. எஸ். கருப்பசாமி (திருப்பூர்) யும், நா. ராமசாமி, ப. கு. சத்தியமூர்த்தி ஆகியோர் பேசினா.

ஃ ஃ ஃ

பெரியகுளம். ஜன 3—

பெரியகுளம்தாலுகா, ஜெயமங்கலத்தில் வெற்றிலைக் கொடிக்கால் தொழிலாளர்கள் பங்களாதேச விடுதலை விழாவினை சிறப்பாகக் கொண்டாடினர்.

பொதுக்கூட்டத்திற்குசங்கத் தலைவர் வி.நாகமுத்து தலைமை தாங்கினார். அது சமயம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பி. கே. முத்துச்சாமி. எம். பிச்சைரத்தினம், எம். தாண்டவன், தி. மு. க. சார்பில்கே.பி.எஸ்.மணி,எம். தங்கராசு, ஆர். சீனிவாசன் மற்றும்கே. அழகு ஆகியோர் பேசினர்.

அவர்கள் பங்களாதேச மக்களின் வீரமிக்க போராட்டத்தை வாழ்த்தினர்.

மேலும் அவர்களின் முக்கிமான பல கோரிக்கைகளைப் பற்றியும் பேசினர். கொடிக்கால் தொழிலாளர்களின் சம்பளத்தை காலையிலேயே கொடுத்துவிட வேண்டுமென்றும், வேலைசெய்ய வேண்டிய இடத்தை முதல் நாளே அறிவித்துவிட வேண்டுமென்றும் கோரியும் பேசினர்

ஃ ஃ ஃ

சங்கரன்கோவில், ஜன, 3—

சர்வகட்சியின் சார்பாக பங்களாதேஷ் விடுதலை விழா விமரிசையாக கொண்டாடப் பட்டது. அன்று மாலை 5 மணிக்கு ஆசிரியர்கள் மாணவ மாணவிகள் அரசாங்க ஊழியர்கள் கொண்ட மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது.

இரவு 7 மணிக்கு சுவாமி சன்னதியில் நகரசபைசேர்மன் பழனிச்சாமி தி. மு. க. தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக எஸ். முப்பிடாதி, சிண்டிகேட் காங்கிரஸ் சார்பாக ஜெகநாதன், சோசலிஸ்ட் கட்சி சார்பாக பரமசிவம்' இந்திராகாங்கிரஸ் சார்பாக செல்லையா ஆகியோர் பேசினர்.

### சிவகிரியில்

பங்களாதேஷ் விடுதலைவிழா பொதுக்கூட்டம் ஊர்வலம் சர்வகட்சி சார்பாககாந்தி கலையரங்கில் நடைபெற்றது. உதவி தாசில்தார் சுப்பையா பிள்ளை தலைமை தாங்கினார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பாக எம். பாண்டியன், எஸ். முத்துச்—சாமி. வலது கம்யூனிஸ்ட்கட்சி சார்பாக கே. செல்லையா, சிண்டிகேட் காங்கிரஸ்சார்பில் ஏ. கோபாலன், வி. பி. அங்கமுத்து, இந்திரா காங்கிரஸ் சார்பாக ராமசாமி—பாண்டியன், வெள்ளைச்சாமி தி. மு. க. சார்பில் சுப. கணேசன், ஆசிரியர்கள் சார்பாக பாலசுப்பிரமணியம் ஆகியோர் பேசினர்கள்.

# மார்க்சிஸ்ட் கட்சி கேரள மாநில செயற்குழு தேர்வு

திருவனந்தபுரம், ஜன. 2—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் கேரள மாநிலக் குழுக் கூட்டம் டிச. 28, 29 தேதிகளில் நடைபெற்றது.

தோழர் ஈ. பாலானந்தன் தலைமை வகித்தார். இக் கூட்டத்தில் கேரள மாநில செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது:

தோழர் சி. எச். கணாரன் (செயலாளர்), ஈ. கே. நயினார் (கூட்டுச் செயலாளர்) மற்றும் கீழ்க்கண்ட 8 பேர் செயற்குழு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தோழர்கள் அழிக்கோடன் ராகவன், கே. சாத்துண்ணி மாஸ்டர், ஈ. பாலானந்தன், வி. எஸ். அச்சுதானந்தன், ஓ. ஜே. ஜோசப், புத்தலத்து நாராயணன், டி. கே. ராமகிருஷ்ணன், பி. வி. குன்னி கண்ணன்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்: தே முத்தையா: